"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."

ஸத்யம்வத.—Speak the Truth.

"Hitch your Wagon to a Star," "To Thine own Self be True."




டின்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 12.] 1903-ம்ஸ்ரீ டிசம்பர்மீ [இலக்கம் 8.

# Godward Ho! A Symposium.

## ii Anandattaimozhi, or,

## THE SACRED EFFUSIONS OF THE HOLY MOTHER.

## ஆனந்தத்தாய்மொழி.

"Man's extremity is God's opportunity"—சாதாரண மனிதன் ஆபத்காலத்திலேயே கடவுளை நினைக்கிறுனதலால் அவனுக்கு ஆபத்து விளையுங்காலத்திலேயே பகவான் உற்றவிடத்துதவியாக நின்று அவனை ஆற்றித்தேற்றிக் காப்பாற்றுகிறுர்—ஆதலால்தான் அவருக்கு **ஆபத்பாந்தவன்** என்கிற பேர்கிடைத்தது. அர்ச்சுனன் தர்மசங்கடத்திலகப்பட்டுக்கொண்டு நிலைதடுமாறித் துக்கமேலிட்டுப் போர்க்களமத்தியில் தன் கடமையை மறந்து துறவியாகப்போகிறேன் என்று சொன்னசமயத்திலேயே, தேர்ப்பாகனுயிருந்த கிருஷ்ணமூர்த்தியானவர் அவனுக்கு **அஞ்சேல்** என்று அபயங்கொடுத்து ஆத்மோபதேசம் செய்யலானுர். பாரதயுத்தத்தில் போர்நடத்தும் அர்ச்சுனனுக்கு சாரதியாய்க் கிருஷ்ணன் தேர் நடத்துந் தொழில்பூண்டு அவனுக்கு ஆபத்பாந்தவனு யிருந்துதவி போர்முகத்துப் பின்வாங்காது தன் கடமையை நடத்தக் காரணுயிருந்ததுபோல், ஒவ்வொரு சீவனும் பிரபஞ்சத்தில் உயிர்வாழ்வினிமித்தம் செய்யவேண்டிய பிரபஞ்சப்போரில், அந்தக் கிருஷ்ண பரமாத்மாவே மேலறிவாகவிருந்து வழிகாட்டி, உள்ளத்திருந்து உண்மையை யுணரச்செய்து, ஒவ்வொரு சீவனும்

தத்தம் கடமையை வழுவறச் செலுத்திப் பெருவாழ்வுற வழிகாட்டிப் பெருந்துணையாக இருந்துதவுகிறார். எப்போது சீவனுக்குத்தாளமாட்டாத துக்கப்ராப்தி நேரிட்டதோ அப்பொழுதே கருணைசமுத்திரமாகிய கடவுள் அவனிடத்துக் கிருபைகூர்ந்து உண்மையுணர அவனுளக்கண்ணைத் திறக்கச் சமயம் எங்கே யெங்கே யென்று எதிர்பார்த்துக்கொண்டு காத்துக்கொண்டிருக்கிறார் என்பது நிச்சயம். இதனுண்மையையுணர மனுஷனுக்கு முக்கியமாக வேண்டியது பக்தி. பக்தியின்றி துரியோதனாதியரைப்போல் அகம்பாவ மேலிட்டு அகச்செருக்கில் மூழ்கிக்கிடந்தால், அந்தச் சீவன் அத்துரியோதனாதியரைப் போலவே அடியோடும் அழிந்து போவது நிச்சயம். பாண்டவரைப்போல் பக்தி மேலிட்டு தைரியத்தையும் தர்மத்தையும் கைவிடாது பற்றிநின்றால், ஈசுவரகிருபையானது, தர்மசாஸ்திரங்களுக்கெல்லாம் எட்டாது அவைகளுக்கு மூலமாயிருக்கும் ஆத்மவுணர்ச்சியை யுண்டுபண்ணி, ஆத்மப் பிரகாசமாம் அறிவு முதிர்ச்சியால் என்றும் அழியாத ஆத்மானந்தத்தை யுண்டுபண்ணிவிடும். ஆகையால் உலகவழியை யனுசரித்தும் சீவன் ஆபத்சம்பவத்தால் துக்கப்பிராப்தி யெய்தினபோது அதைப் போக்குவான் ஈசுவரகிருபையால் அவனுக்கு சற்குருவாப்தி யுண்டாகிறது. பகிர்முகப்பார்வையும் பரதரிசனப் பக்திப் பழக்கமுமுள்ளவருக்கு அவரெண்ணமிருந்தவாறு புறப்புறமாக சற்குருவாப்தி கிடைக்கும். அந்தர்முகப்பார்வையும் உள்ளூறவுணர்ந்து ஆராயுந்தன்மையும் வாய்ந்த புத்திசாலிகளுக்கு அறிவேகுருவாய் நின்று அந்தர்முகதரிசனந்தந்து உள்ளத்துத் தோற்றமே புறத்திலும் வெளிப்பட்டு நிற்கும். இப்படி பகிர்முகமாகவோ அந்தர்முகமாகவோ சற்குருவாப்தி பெற்ற பரிபக்குவ சீவனை சற்சீஷனென்று வேதாகம முறைபற்றிச்செல்வோர் தம் பரிபாஷையில்கூறுவர்—இவனே உண்மைமாணாக்கனும். இவன் அறியப்போகும் அறிவே உண்மையான அறிவாம். இதுகாறும் இந்தச் சீவன் கற்றுங்கேட்டும் கலைபயின்றும் தேறித்தெளிந்தன வெல்லாமும், உலகிலுழன்று பட்ட அனுபவமெல்லாமும் இந்த உண்மைமாணாக்கனும் 'சற்சீஷன்' பதவிகிடைக்கப் பட்டப்பாடேயன்றி வேறுபயன் விளைப்பதில்லை. இப்படிப்பட்ட சற்சீஷனுக்குப் போதிக்கப்படும் உண்மையறிவே ஆத்மவித்தை யென்றுசொல்லும் அழியாத அறிவு ஆம். இந்த அறிவுடையாரையே, பிறவிஞானியாகிய திருவள்ளுவர்,

> "அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
> ரென்னுடைய ரேனு மிலர்."

என்று பெருமையாய்த் தம் திருக்குறளிற் செப்பியுள்ளார்.

அர்ச்சுனன் பாரதப் போர்செய்யக் கடமைப்பட்டவனா யிருந்ததுபோல் பிரபஞ்சப் போர்புரியக் கடமைப்பட்ட சற்சீஷனும் பரிபக்குவசீவன், உலகவின்பங்களை வெறுத்துக் காட்டகத்தேசென்று கடுந்தவம் செய்தலே மேலென்று எண்ணியகாலத்தில், ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அர்ச்சுனனுக்குப் புத்திசொல்லித் தேற்றியதுபோலவே, அச்சீவனின் பூர்வபுண்யவாசனையே யுருவெடுத்து அன்புமிகும் அன்னையுருவாகவந்து "அப்பா! உண்மைத்துறவு பெண்டுபிள்ளைகளையும் உத்யோகத்தையும் விட்டு, செய்கடன்களைச் செய்யாது தவிர்த்து, கானகத்தே சென்று வல்விலங்குகளோடிருந்து பழகிப் பிராணனை வீணில்வதைப்பதல்ல: உன்னகத்தே யிருந்து உன் வலிகொண்டே யுன்னைப் பெந்தப்படுத்தி 'வலைப்பட்ட மான்'போல் உன்னை யாட்டுவிக்கும் கருவி

கரணங்களாம் இந்திரியக் கூட்டங்களன்றி யுனக்கு வேறொரு ஸம்ஸாரமுமில்லை.—இவைகளால் வரும் துக்கமின்றி வேறு துக்கமுமில்லை"யென்று அருள்மிகுதியால் அன்புநிறைந்து, "அகம் பழுத்தால் எதுவும் தானாய் விழுந்துபோம்; அதுவன்றி நாமாக விட்டோடினால் எங்கு போனாலும் அவை நம் கூடவேவரும்" என்று சொல்லி புறத்துறவினால் ஆவதொன்றில்லை யென வற்புறுத்தி அகத்துறவின் மர்மத்தை யுபதேசித்து, ஆத்மஞானம் உதிக்கில் எல்லா பெந்தங்களும் தாமாகக் கட்டுவிட்டுப்போம், கர்மங்களெல்லாம் நசித்துப்போம்; துக்கங்களெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கிப்போம்—"ஒரு பயமுமில்லை. ஆனந்தமாயிருக்கலாம். அசைவற்றிருக்கலாம். தானேதானாயிருக்கலாம்" என்று சொல்லிய ஆறுதல்வார்த்தைகளைக்கேட்டு தெளிந்துந்தெளியாது மயக்கமுற்று மேல்விசாரணை செய்யத் துணிந்தகாலத்தில் சற்குருவின் பெருங்கருணை விசேஷத்தினா லுள்ளத்திலுண்டான ஒரு ஆறுதலை யுணர்ந்து ஒருவிதத்தில் தேறித் திடனுற்று வைராக்கிய சித்தனாய் பக்திபூரக சிந்தையனாய் சற்குரு வார்த்தையை பக்தி சிரத்தையோடும் சிரவணஞ்செய்யத் துவக்கின கட்டத்தில் ஆரம்பிக்கிறது **"ஆனந்தத் தாய் மொழி"** யென்னும் அருள்வாக்காம் பிரபந்தம். வைராக்கிய சித்தனாகி உலகை விட்டொழித்து உண்மைத்துறவு பூண்டதின் உண்மை **"வயிறொடு கிளத்தல்"** என்னும் முற்பாகத்தில் நன்றாக விளக்கப்பட்டிருக்கிறது. அதிலே சற்குருசெய்த ஆத்மோபதேசங்கேட்டு அதில் மோகித்து மனதிடுபட்டுப்போக உண்மைவைராக்கியம் பூண்டு, தன்னுடையஸ்வரூப மின்னதென்று தானே கண்டுகொண்டதைச் சொல்லி, பூர்வமான உலக வாசனைகளெல்லாம் ஓரிடத்து உருவெடுத்து நின்றதுபோல் சீவபாவத்துக்கு முக்கியாதாரமும் மூலஸ்தானமுமான **வயிற்றை** உருவகப்படுத்தி அஃதோடு பேசி யொரு ஒப்பந்தம் செய்து கொண்ட பாவனையாக சீவாத்ம தத்துவ பாவங்களனைத்தும் இத்தலைப்பின்கீழ் அதிசுருக்கமாகச் சொல்லப் பட்டிருக்கின்றன. பிறகு ஜீவயாத்திரையின் இயல்புகூறி, 'வாய்மை விரதம்', 'சுமங்கலி விரதம்' இவைகளின் உண்மைகூறி, கடவுளின் திருவிளையாட்டு மகிமையையும் அவர் தம்மைச் சரணடைந்தாரோடு நேர் நேராக நின்று பேசுந்தன்மையையும் விளக்கி 'பிரார்த்தனைப்பத்துக்' கூட்டி அருட்பிரசாதம் பெற்ற வைபவம்கூறி "ஆனந்தத்தாய்மொழி"யால் ஆத்மானுபவம்பெற்ற சற்சிஷர் தனக்குக் கடவுள் "தாயாய்வந்து முலையைதந்து" ஞானப்பாலூட்டி வளர்த்த வைபவத்தைத் தான் கேட்டது கேட்டபடிக்கும், கிரகித்தது கிரகித்தபடிக்கும், உள்ளனுபவமிருந்ததை யுணர்ந்துணர்ந்தவாறும் செப்பத்துவக்கி 'தாய்-குழந்தை' பாவனையிலேயே முற்றும் நின்று பண்டிதர் பாஷாவிற்பன்னர் உலகஞானிகள் எல்லாரையும் மறந்து சத்தியவழியில் நின்று, சாதனசதுஷ்டய சம்பன்னர்களானசற்சிஷர்கள் செவிமடுத்துண்டு இன்பம்சுவைக்கும் இனியமொழிகள் **ஆனந்தத் தாயின்** அருட்சுவைபொழிய பொருட்சுவை நிறைந்து பொலியும் சாமான்ய பாஷையில் உண்மையுணர்ந்தோதியதை யுள்ளபடி சொல்லிப்போகிறார். "காட்டுக்குறியுங் கடந்தவர்காரண மேட்டின் புறத்திலெழுதி வைத்தென் பயன்" என்பதனுண்மையை யுணர்ந்தும் தான் வழி பற்றிச்சென்றபோது உடனனுபவக்குறிப்பறிய வகையின்றித் தவித்துத்தியங்கினதை நினைத்து அத்துன்பம் மற்றவருறுதபடி நீக்குவான் கருதி மனோவாக்குக்கெட்டாத வுண்மையனுபவத்தை "உரையற்ற தொன்றையுரைசெய்யுமூமர்களை" யொத்துச் சொல்லாது சொன்னபடி யெழுதிவைத்ததாக விளங்குகின்றது.

" உரைத்ததையுணரார் ஊனர்களேயானாலும்
என்னைப்போலலைந்திடுவோர் ஏங்கித்தியங்கிடாமல்
உள்ளதையுள்ளபடியுரைத்திடுவே னாசிமுனிவாயாலே."

என்னும் அவர் வாக்கினாலேயும் இது உறுதிப்படுகின்றது. இந்த 'ஆனந்தத்தாய்மொழி' ஒன்பது பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு முதலாவது பாலப்பருவம்—வித்தைப்படலத்தில் குருகடாக்ஷம் பெற்றதை மழலைச்சொல்லால் திருவருட் குழவியாயிருந்து செப்புகிறார். இந்த மழலைச் சொல்லின் கருத்து ஆத்துமா நிருபாதிகன், "பாலினுள் நெய்யும் பழத்துளிரசமும்" போலப் பாவியிருக்கிறான் என்பதாம்.

இந்த உண்மையையே ஸ்ரீகிருஷ்ணபகவான் சோகத்தில் மூழ்கியிருந்த அர்ச்சுனனைப்பார்த்துப் 'புன்சிரிப்புத்தவழுமவர் இன்பமுகமலர' முதலில் சாங்கியமுறைபற்றியும், பிறகு யோகமுறைபற்றியும் முறையே தெளியச்சொல்லி யுபதேசிக்கிறார். சாங்கியமாகிய "ஆத்மதத்துவம்" பற்றி "ஆத்மானாத்ம ஞானிகள், சுகதுக்காதிகள் அந்தக்கருண தருமமே யன்றி, ஆத்மதருமமல்ல வென்றறிகிறார்கள். அவர்களை துக்க சுகாதிகள் பாதிக்கமாட்டா. அவர்கள் தான் மோக்ஷயோக்யர்கள்" என்று சொல்கிறார். (பகவத்கீதை 2-வது அத்யாயம் 12-முதல் 30-வரையிலுள்ள சுலோகங்களில் பகவானுடைய தத்துவோபதேசத்தை விரிவாய்க் கண்டுகொள்க.) பகவான் ஆத்மதத்துவத்தை யுபதேசித்தபின் அந்தத் தத்துவோபதேசத்தை யனுசரித்து நடக்கக் கூடியதாக அதைக் கிரகிக்கும் சக்தியின்றித்தியங்கின அர்ச்சுனனைப் பார்த்து பகவான் 31-38 சுலோகங்களில் உலகவிஷயமான ஞானத்தைச்சொல்லித் தாம் போதித்த ஆத்மதத்துவத்தை யனுசரித்து நடக்கும் வழியைக் (கரும) யோகமுறைப்படி பின்னுஞ்சொல்லுகிறார்—(40—51 சுலோகங்கள் பார்க்கவும்.) அப்பப்பா! இந்த உண்மையை அறிவது மஹாகஷ்டம்! என்னதான் தெளிவாக வெடுத்துச்செப்பினும் உண்மை குருவாக்கினின்றும் வெளிவருங்காலத்தில் அவர் கிருபா நோக்கினாலும் சற்சிஷனுடைய பக்திவிசேஷத்தாலும் ஒரு க்ஷணமாத்திரத்துக்கு அவர் சொல்வதெல்லாம் சரிபோல்படும். உடனே அவித்யாவாசனையானது அஞ்ஞான இருள் வடிவமாக வந்து மூடிக்கொள்ளும். சிந்தைகலங்கிப் போம். புத்திதடுமாறிப்போம். தத்தித்தடுமாறிக்களைத்து அகம்பாவமழிந்து குழந்தை போலாகி குருவை நினைந்து சிந்தைநொந்து வருந்தியழுங்கால் அவர் கருணைகடாக்ஷத்தால் ஆறுதல் தோன்றும். அகம்பாவம் நழுவியகாலத்தில் ஆதரவு கூறித்தேற்றி உளத் திடன் அளிப்பார். உண்மை வழிகாட்டி, உதவியொன்றும் செய்யாது நீயே தேறித்துணிந்து செல் என்பார். துணிந்து முயன்று ஊக்கங் குறையாதுழைத்தால், பக்கத்தில் நின்று உள்ளும் புறமும் ஒருங்கே நிறைந்தவராய், ஸ்ரீகிருஷ்ணபகவான் சாரத்தியஞ்செய்த சிறப்புவிளங்க நல்வழிகாட்டி நயம்பலசெய்து உற்றவிடத்துதவியாயிருந்து ஆதரிப்பார். இந்த உள்ளனுபவங்களெல்லாம் தெள்ளிதாகவிளங்க, இந்த 'பாலப்பருவத்தில்' அனுபவரீதியாக 'ஆனந்தத்தாய் மொழி'யிற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்ம வித்யாபோதத்தில் முதல் முதல் அப்பியாசம் பெறுகிறவர்களுக்கு குருவினுடைய வாக்கியார்த்தம் "தூராதிதூரம் சொல்லத்தொலையாது" என்றே படும்: சிறு குழந்தைகள் பெரியோர் சொல்லிற்பிரியமின்றி தன்னொத்த குழந்தைக

ளோடு மனங்கலந்து உற்சாகமாக விளையாடுவது போல், தன்னொத்த சற்சிஷன் உள்ளனுபவரீதியாக குருவின் வாக்கைக்கிரகித்துச் சொல்லும் சொல் குருவாக்கினும் சுலபமாக மனதிற் பதியும். இதனாலேயே குருமுகோபதேச ரீதியாக உண்மையை விளக்கல் கிலாக்கியமாகப் பெரியோரெல்லாராலும் கொண்டாடப்படுகின்றது. வேதங்கள் எவ்வளவோ இருந்தும் அவற்றின் சாரம்சத்தையெல்லாம் ஸ்ரீகிருஷ்ணபகவான் தன் தோழனாகிய அர்ச்சுனனுக்கு ஒய்ந்தொழிந்துள்ள காலங்களில் சொல்லாது போர்முகத்தில் அவன் துக்கப்ராப்தியடைந்த சமயம் பார்த்துச் சொல்லலுற்றார். அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை போனபோது கூடவேசென்ற கிருஷ்ணமூர்த்தி அப்பொழுதெல்லாம் அவனுக்கு போகசகாவாகவிருந்து எத்தனையோ கிடைத்தற்கரிய பெண்களையெல்லாம் அவனுக்குக்கிடைக்கும்படி உபாயங்கள் செய்துதவி, அவன் போர்முகத்தில் சித்தங்கலங்கி தர்மசங்கடமேலிட்டு "எனக்கு போக போக்கியங்கள் ஒன்றும்வேண்டாம்: நான் காட்டுக்குப்போய்க் காலத்தைக்கழிக்கிறேன்" என்று சொன்னபோது அவனுக்கு தத்துவோபதேசம்செய்து உலகஞானமும் போதித்து "வந்தசண்டையை விட்டுப்போனால் உனக்கு அபவாதமும் அபகீர்த்தியும், உலகத்தில் அக்கிரமுந்தான்மிஞ்சும்: நீ பலனையுத்தேசித்துச் சஞ்சலப்படாமல், ஆத்மானாத்மவிவேகனாய்த் திடசித்தத்தோடு உன் கடமையைக் குறைவின்றிச் செய்துமுடி" யென்று வற்புறுத்தி அவனைச் சண்டைபோடத் தூண்டிவிட்டார். இப்படியேதான், இங்கும் 'ஆனந்தத்தாய்மொழி'க்குக் காரணமாயிருந்த குருசிஷ்ய பாவனாமூர்த்தாத்மகராக விருக்குமிருவரில், தாயுருவாய் நின்ற சற்குருமூர்த்தி, சற்சிஷனாகவமைந்த சிவனைச் சுமார் 20-வருஷகாலங்களாக நன்றாக வுணர்ந்தும் அப்பொழுதெல்லாம் உலகஞான சம்பந்தமான பிரவிருத்தி விஷயங்களைப்பற்றி உடனிருந்துபேசி உபகரித்துப், பரிபக்குவம் மிகுந்து பிரபஞ்ச வெறுப்புற்றகாலத்தில், புறத்துறவாகிய பொய்வேடம் உனக்குப் பயன்படாதென்று அவள் உள்ளொளிப் பிரகாசத்தாலறிந்த வுண்மையை உறுதிபயக்க வற்புறுத்தி உண்மையான தத்துவோபதேசஞ் செய்யலானாரென்பது 'ஆத்மவித்யாமஞ்சரி'யில் 'ஆனந்தத்தாய்மொழிக்கு முன்னுரையாக (Fore-word) இங்கிலீஷில் எழுதிச்சேர்த்துள்ள வார்த்தைகளினால் விளங்குகின்றது. இவ்வாறு சந்தர்ப்ப சமயோசித விசேஷங்களை நன்றாக ஆய்ந்தறிந்து கவனித்துக் கருத்திருத்தி 'ஆனந்தத்தாய்மொழி'யை வாசிப்போருக்கு அதில் பொதிந்து கிடக்கும் உண்மை யுள்ளபடி விளங்கும். விரிவஞ்சிக் குறிப்பாக இக்கிரந்தத்தைப் பயன்பட ஓதுமுறையின்னதென்று ஒருவாறு காட்டிநிறுத்தலானோம்.

ஓம் தத் ஸத்.

---

## REVELATIONS OF THE 'RADIUM'

# ஓர் அற்புத 'சூடாமணி.'

---

'Rontgen Rays' அல்லது 'X Rays' என்னும், அதிசயமான உள்ளொளிப் பிரகாசமொன்று புதிதாய்க்கண்டு பிடித்திருப்பதையும் அதன் ஒளி மண், கல், மரம் முதலியவற்

றைக்கண்ணாடிபோல் ஊடுருவிச்சென்று விளக்கும் தன்மையுடையதையும் பற்றி அக்டோபர் மாசத்து விவேகசிந்தாமணியில் சொன்னோம். இன்னுமொரு அதிசயவஸ்து அதிநூதனமாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அதற்குப்பேர் 'Radium' என்று சொல்கிறார்கள். ஏனென்றால் அது தன் ஆகிருதியிலாவது கனத்திலாவது குறையாமல் சதா ஒளியும் உஷ்ணமும் கொடுத்துக்கொண்டிருக்கின்றது. அது ஒரு அதிசயப்பொருளே: ஏனெனில் இதுவரையில் கண்ட பொருள்களெல்லாம் உருமாறாமலும் தேய்வுகுறைவின்றியும் உஷ்ணமாவது ஒளியாவது கொடுத்ததில்லை. இக்காலத்துப் பூதபௌதிக சாஸ்திரிகள் சூரியன்கூட ஓயாது ஒளிவீசுவதால் தேய்ந்து கொண்டுவருகிறதாகவும், பலகோடிவருஷங்கள் போனால் சூரியனும் தேய்ந்தழிந்து உலகமேநாசமாகப்போய் விடுமென்றும் வெகுசட்டதிட்டமாய் அது இருக்கக்கூடிய காலத்தை வரையறுத்துச்சொல்லிவந்தார்கள். இப்பொழுது இந்த Radium என்னும் நூதனலோகம், இதுவரையில் பூதபௌதிக சாஸ்திரிகள் நம்பியிருந்த மாறாவிதிகளையெல்லாம் மாற்றி விட்டது. இந்த அவ்வற்புதப்பொருளைத் தமிழில் குறிப்பிடச் 'சூடாமணி'யென்று அதற்கு நாம் பேரிட்டோம். ஏனெனில், இது ஒரு அற்புதலோகமே. இது தானாக ஓயாதொழியாது மாறாதுமங்காது ஒளி வீசுந்தன்மையுடையதாயும் உஷ்ணமுண்டுபண்ணுந்தன்மை யுடையதாயுமிருக்கிறது. எவ்வளவு உஷ்ணம் அளித்தாலும் அதனெடை குறைவதில்லை: உருமாறுவதில்லை: அதில் எவ்வித மாறுபாடுமுண்டாவதில்லை. இதன் ஒளியைப் பிரத்தியக்ஷத்திற் காட்ட ஸர் உவில்லியம் க்ருக்ஸ் என்பவர் 'Royal Society' என்னும் சாஸ்திர விற்பன்ன சபைகூடிய மீட்டிங்கில் ஒரு உபாயஞ்செய்து விளக்கினார். 'X Rays' என்னும் நூதனமான 'உள்ளொளி' விழுந்திலங்கத்தக்க ஒரு 'Sensitive screen' சூக்ஷ்மத்திரையில் இந்த நூதனப்பொருளின் ஒளி விழும்படி செய்து காட்டினார். இந்த ஒளியின் சக்தியால் தேகத்திலுள்ள இரணங்கள் புண்கள் சீக்கிரத்தில் குணப்பட்டு சொஸ்தமாகின்றனவாம். அன்றி இது நித்தியமாக குறைவுமறைவின்றி உஷ்ணமளித்துக் கொண்டிருக்கின்றது. ஐரோப்பிய சாஸ்திர விற்பன்னர்களெல்லாம் இந்தப்பொருளின் குணங்களைக்கண்டு தியங்கி மயங்கி அதிசயித்த வண்ணமாயிருக்கிறார்கள். இது ஒரு வகை உப்பு என்று சொல்கிறார்கள். எதுவானாலும் அநித்தியமான இவ்வுலகில் இது ஒரு நித்தியமானவஸ்துவென விளங்குகிறது. அந்தலோகம் மட்டும் ஏராளமாகக்கிடைத்து விட்டால் உஷ்ணம், வெளிச்சம் இரண்டிற்கும் வரவு செலவு கணக்கின்றி வேண்டிய அளவுக்கு யாதொரு நஷ்டமுமின்றி உபயோகிக்கலாம். விறகு விளக்கு இரண்டிற்கும் செலவில்லை. நாம் படித்த இரண்டாம் பாடப்புத்தகத்தில் விளக்கு வெளிச்சத்தைக் கண்டறியாத ஒரு பட்டிக்காட்டு மூடன் பட்டணம் பார்க்கப்போனபோது அவன் விருந்தினனா யிறங்கியிருந்த உறமுறையான் வீட்டில் விளக்கு வெளிச்சத்தைக்கண்டு அதை 'சூரியன் குஞ்சு' என்றெண்ணி கூரையில் அதையெடுத்தொளித்து வைப்பதாகவெண்ணி வீட்டைக் கொளுத்தி விட்டானென்றும், வீடுபற்றி யெறிந்து சாம்பலாய்ப்போனபின் எல்லாரும் மிஞ்சி மிகுந்த சாமான்களைத்தேட, இவன் மிகவும் விசனக்குறியோடு கூடியவனாய்த் தான் அருமையாய் எடுத்தொளித்துவைத்த "சூரியன் குஞ்சைத்" தேடிக் கொண்டிருந்து தன் குறையை வெளியிட இவன்தான் வீட்டைக்கொளுத்திய மூடன் என்று எல்லாரும் கண்டு கொண்டு அவனை உதைத்து வெருட்டிவிட்டார்களென்றும் ஒரு கதைபடித்ததுண்டு. இப்பொ

பூது மேற்றிசையிலுள்ள மஹாவித்வான்களெல்லாம் இந்த 'Radium' என்னும் நூதன 'சூடாமணி'யை "சூரியன் குஞ்சு" என்றே மதித்து அதிசயப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். மனிதன் முற்காலத்துக்கிப்போ கல்வி நாகரிகத்தில் மிகமுந்தினவனாய்விட்டான் என்றுசொல்லக் கேட்பதுண்டு. கிஞ்சிக்ஞனான சீவன் என்னதான் அவன் புத்திவன்மையால் பிரகிருதி தத்துவங்களையுணர்ந்து உள்ரகசியங்களை வெளிக்கிழுத்தாலும் மாயாசக்தியான பிரகிருதியானவள் அதிமேதாவியான புத்திமானையும் அறியாக் குழந்தைபோல் நடத்தி அவன் காணப்பொருளைக் காட்டி ஆசையூட்டி அலைக்கழித்து மனிதன் அவளை நெருங்கநெருங்க, அவள் இருந்தவிடத்திலிருந்துகொண்டே வெகு தூரத்திற் போய்விடுகிறாள். இந்த ஜாலவித்தையின் இரகசியத்தை ஆத்மதத்துவ முணர்ந்து ஐம்புலன் பொறிகளையும்வென்ற மெய்ஞ்ஞானிகளன்றி மற்றவர்கள் எளிதில் கண்டறிந்துய்வது கஷ்டசாத்தியமேயாம். ஆனாலும் பகிர்முகப்பார்வையிலே பக்திமிகவைத்துள்ள மேற்றிசையார் சளைக்காது இளைக்காது பிரகிருதியின் மூடுதிரைகளை யொன்றொன்றாகப்புகுந்து பார்த்துவருகிறார்கள். வெங்காயத் தோலையுரித்து வித்தைக்காண்பான் முயற்சிபோல் இவர்கள் கடைசியில் உண்மையை ஒரு விதத்திலுணர்வார்களென்றே யெண்ணுகிறோம். ஆனால் இவர்கள் உண்மையுணர்வு ஊகை அனுமானப்பிரமாணீயகமாயிருக்குமேயன்றி பிரத்தியக்ஷ (சாக்ஷாத்கார) ஆத்மதரிசனம் இவ்வழியால் இவர்களுக்குக் கிட்டுவது அருமை. "தன்னையறிந்தவனே தலைவனாவான்." உலகெலாமறிந்தும் தன்னையறியாதவன் "உலகெலாமுணர்ந்தோதற்கரியவனைக்" கண்டுய்தல் எப்படியாகும். 'Radium' என்னும் நூதனப்பொருளின் தன்மை யெப்படிப்பட்டதோ அப்படிப்பட்டதே அந்தர்யாமியாயிருக்கும் ஆத்மப்பிரகாசம். இந்த ஆத்மப்பிரகாசத்தையே ஐந்துதலை நாகத்தின் தலையிலிருக்கும் ஓர் ஒளி வீசும் மணியாகச்சொல்லி அதை **நாகரத்னம்** என்பார். சூடாமணி யென்றும் சொல்லுவார். ஔவையார் அருளிச்செய்த குறளடியொன்று நாடிகளின் தன்மையை விளக்குங்கால் அவை யெங்கும் "தாமரை நூல்போலு" நுழைந்து நிற்குமென்று கூறி,

"ஆதித்தன் தன்கதிர் போலவந் நாடிகள்
பேதித்துத் தாம்பரந்த வாறு"

என்று சொல்கிறார். சூரியகிரணங்கள்போல வந்நாடிகள் பிரிந்து பரந்து நிற்கும் என்று செப்புகிறார். யோகமார்க்கத்தில் முயன்று யோகசித்தியினால் இதனுண்மையையுணர்ந்தவர்கள் இந்த அபூர்வமானதும் அதிசயம் விளைப்பதுமான Radium என்னும் வஸ்துவின் குணமுள்ள அதிசயமான ஒளியொத்த நுட்பப் பொருளினாலமைந்துள்ள நாடிகளில் இவ்விதசக்தி யடங்கிக் கிடக்கிறதென்றும், அதை முறைப்படிசெய்யும் யோகாப்பியாசத்தால் சித்தர்கள் விளங்கச் செய்திருக்கிறார்களென்றும், இன்றைக்கும் நாளைக்கும் தக்கவர் தக்கபடி முயற்சித்தால் அப்படியே விளங்கச் செய்யலாமென்றும் இலகுவிலறிவார்கள். இதை பகிர்முகப்பார்வையுள்ளோருக்கு விளக்கிக் காட்டுவது அசாத்தியமாம். ஆனால் அதற்கும் ஒரு காலம் வந்தாலும் வரலாம். அது எப்போவருமென்று சொல்வதுமட்டும்தான் சாத்தியமாகவில்லை. யேசுகிறிஸ்துவைப்போன்ற யோகசித்தர்கள் தங்கள் உள்ளொளியால் தேகத்தை மறைத்துக்கொண்டு பிறர்காணாதபடி ஜனங்கள் மத்தியில் நடந்ததாகச் சொல்கிறார்கள். அணிமாசித்திகளில் இது ஒன்றாம். இதையப்பியசித்து சித்திபெற்றவர்களன்றி மற்றவர்கள் இதைப்பற்றிப்பேசிப்பயனில்லை.

ஹோமர் என்னும் மகாகவிபாடிய

# இலியயுத்தம்.

## முதற்காண்டம்.

(212-வது பக்கத் தொடர்ச்சி.)

அகமம்னனுக்கும் அக்கிலனுக்கும் பிணக்கம்.

வேறு.

76. ஆதலாலினி யகமமனோடரும் பகைகொண்
டேதமார் பழிகொளு நினைப்பகற்றுதி யெழுந்த
தீதுகூர்தருசினத்தினைத் தவிருதி தேவர்
ஓது நல்லுரை கடந்திடேலென வினிதுரைத்தாள்.

(இ-ள்.) ஆகையினாலே இனிமேல் அகமம்னனோடு அரியபகைகொண்டு அவனைக்கொன்று பழி வாங்குமெண்ணத்தை நீக்குவாயாக. அவன் மேலுண்டாகிய கொடிய கோபத்தை விட்டுவிடு. தேவர்கள் சொல்லுகின்ற நல்லுபதேசத்தை அலக்ஷியம் செய்யாதேயென்று இனிமையாகக் கூறினாள்.

77. உரைத்த மாற்றமுட்கொண்டன னக்கில னுரைக்கும்
வருத்துமாயினு மாதராய் நின்னுரை மறுத்தல்
பொருத்தமன்றதாற் பொருசின மொருவினன் புரைதீர்
திருத்தவிர்ந்திடாரன்றுகொல்தேவரைப்பணிந்தோர்.

(இ-ள்.) இவ்வாறு தேவமாது கூறியவார்த்தைகளைக் கேட்டபோது அக்கிலன் சொல்லுகின்றான். என்னன்னாய்! நீ சொல்லிய வார்த்தைகளால் எனக்குத் துன்பமுண்டாவதாயினும் அவற்றை மறுத்துரைத்தல் நியாயமன்றாதலின் உன்சித்தப்படியே என்கோபத்தை நீக்கினேன். தேவதைகளைப்பணிந்து அவர்கள் சொல்லியவண்மை நடந்து கொள்பவர்களுக்கு குற்றமற்ற சமஸ்தமான சௌபாக்கியங்களும் உண்டாகுமன்றோ?

78. வான் மடந்தையுண் மகிழவிவ்வுரையினை வழங்கி
ஊன் மணந்த விராதவாளுறையினுட் செறித்தான்
தேன்மிடைந்திமிர் செறிகுழற்றேவியு முடனே
தான் மடங்கினள் வானவர் சபையினைச் சார்ந்தாள்.

(இ-ள்.) மினரவா என்னும் அத்தெய்வ மங்கை மனங்களிக்கும்படி இவ்வார்த்தைகளைச் சொல்லி அக்கிலன் தன்வாளாயுதத்தை உறையிலிட்டான். உடனே அத்தெய்வமங்கையும் திரும்பி வானவர் சபையை அடைந்தாள்.

79. பின்னு மக்கிலன்றன் சினந்தவிர் கலன் பிறங்க
மன்னி வீற்றிரு மன்னனை நோக்கினன் வழுத்தும்
என்னையே யிழிசுணங்கனி லெரிசிடு முகத்தாய்
உன்னதுள்ளினி லாண்மையென்பது சிறிதுளதோ.

(இ-ள்.) இவ்வாறு கோபம் நீங்கிவிடுவதாகச் சொல்லியும் தன்கோபம் தணியாளுகி அக்கிலன் அங்கு சபையின் கண்ணே வீற்றிருக்கும் அரசனைநோக்கி, இழிந்த நாய்போல்க் கடுகடுத்த முகத்தையுடையாய் உன்னெஞ்சில் ஆண்மையென்பது சிறிதேனு முள்ளதோ?

80. மறைந்து வன்மையின் வதைத்திடு மறலிடையேனும்
நிறந்திறந்து முன்னின்றிடு நெடுங்களத்தேனும்
சிறந்தபேரரை நீயென்றெனுஞ் செய்வது முளதோ
இறந்து வீரர்கள் படுதல் கண்டிருப்பதை யலதே.

(இ-ள்.) பதிவிருந்து பகைவர்களைச் சடிதியிற்றுக்கிக் கொல்லும் சண்டையிலேனும், பகிரங்கமாகப் போர்க்களத்தில் ஆயுதங்கள் மாற்பிற்றுக்கச் செய்யும் சண்டையிலேனும் நீஎப்போதாவது எதிர்த்து நின்று தைரியமாகப் போர்செய்தலும் உண்டோ. வீரர்களைச் சண்டைசெய்யவிட்டு அவர்கள் போராடி மடிதலைப்பார்த் திருத்தலேயல்லாமல் நீ ஆண்மையோடு போர்செய்வது முண்டோ.

81. வென்றிவீரரைச் சமரினிலெதிர்த்து நீள்விறலால்
கொன்று வீழ்த்துநேரலர் பொருள்கொள்ளுதறனினும்
இன்றிருந்தவர் தமரினி லொருவனெண் பொருளை
நன்றுகொள்ளுதலெளி தெனநபந்தனைபோலும்.

(இ-ள்.) வெற்றி கொள்ளும் பராக்கிரம சாலிகளாகிய வீரர்களை எதிர்த்து யுத்தஞ்செய்து வலியினால் அவர்களைக்கொன்று வீழ்த்திச் சத்துருக்களிடத்திலிருந்து பொருள்கவர்தல் நிரம்பக்கஷ்டமாதலின் அதனைவிட்டு இருந்தவிடத்தில் இருந்தவண்ணமே உன்னினத்தார்களிலொருவன் பொருள்களைப் பறித்த லெளியதாதலின் அவ்வாறு செய்ய எண்ணினால் போலும். இது மெத்தவும் நன்றாயிருந்தது!

82. வன்புமீனமு மருவி நின்றமர்களை வருத்த
அன்பிலாதயோ வனுப்ப வெம்விதிவச மனைந்தாய்
இன்பமார் சுதந்தரமிழந்தடி பணிந்தீங்கெம்
மொய்ம்புகாட்டியே முனிகலே மாதலிற் பிழைத்தாய்.

(இ-ள்.) மேன்மையும் தயையும் இல்லாமல் கிராதனாய்க்குடிகளை வருத்தும் பொருட்டு நாங்கள் செய்தபாவத்தால் கடவுள் எங்களை வெறுத்து எங்கட்கு அரசனாய் வந்தனையே யன்றிவேறில்லை. நீசெய்யும் துராகிருதங்களுக்கு உன்னை யாங்கள் கொல்லுதல் நீதியேயாயினும் எங்கள் சுதந்திரத்தை யிழந்து உன் ஏவலில் நிற்க உடன்பட்டிருத்தலின் எமது வலிமையை உன்னிடத்திற் காட்டி உன்னைச் சிக்ஷிக்க எண்ணேம். ஆதலால் நீ உயிரோடு பிழைத்திருக்கலானாய்.

83. காண்டி யென்னெடுங் காத்துறுக வினுடைத்தண்டம்
ஆண்ட மன்னராலமைவுறு நீதிபுநலனும்
மாண்டயோ வினதருள் வழிமண்ணிடைச் செலுத்தப்
பூண்டதோர் குறியாமிது புகலுவன் கேளாய்.

(இ-ள்.) இதோபார் என்கையிலே நதியிருப்பதாகிய தண்டத்தை. இஃது அரசர்கள் தமக்குரிய நீதியைச்செலுத்தி நன்மையாகப் பிரஜைகளைக் காப்பதற்கு ஓர் அறிகுறியாக யோவினால் அருளப்பட்டதன்றோ? இன்னம் சொல்லுவேன் கேள்.

84. தூயதாங் திருக்கோலி தனிணையாற் சொற்றேன்
மேயசூளிது மறுக்கலர் வேந்தரென்றறிதி
ஏயசின்னேயும் யவனர்தங்குலத்தையுந் துறந்தேன்
பாயபோரினிற் படைத்துணைவருகலனினியே.

(இ-ள்.) இந்தப்பரிசுத்தமாகிய தண்டத்தின்மேலாணை வைத்துச்சொன்னேன். இந்தச்சபதத்தை அரசர்கள் ஒரு நாளும் லங்கனம் செய்யமாட்டார்கள் என்று நீயறிவாயன்றோ. இந்தத்தண்டின்

மேலானே! உன்னையும் யவனரையும் இன்றோடுவிட்டு நீங்கினேன். இனியுங்களுக்கு மெனக்கும்யாதும் சம்பந்தமில்லை. இனிமேல் யுத்தத்தில் என்றும் படைத்துணையாக வரமாட்டேன்.

85. எத்தராமுரட் பகைஞன் பல்விரும் படையெறிந்து
யுத்தபூமியி லுதிர வெம்புனலுறத் தேக்கிச்
சுத்தவீரர் தம்பிணக்குவை மலையினிற் றோன்ற
வைத்த காலையிலறிகுவை வலியமென் பகையே.

(இ-ள்.) எத்தர் என்னும் மகாபலசாலியாகிய பகைவன் அநேக சிறந்த ஆயுதங்களைப் பிரயோகித்து அநேகவீரர்களைக்கொன்று போர்க்களத்தில் இரத்தவெள்ளந்தேக்கிப் பிணங்களை மலைமலையாகக் குவித்தபோது நீயறிவாய் என்னைப்பகைத்துக் கொண்டதன் பயனை.

86. காத்திடுந்திற மின்மையாற் காக்கவல்லாரை
நீத்தநின்னுணர் வின்மையை நினைந்துளம்வருந்தி
ஆத்திரத்தினு லயருவையாரினும் வலிமை
பூத்தவீரனைப் பகைத்த நின்புன்மையை வெறுத்தே.

(இ-ள்.) அப்போது உன்னையுன் வலிமையினாலே காப்பாற்றும் சாமர்த்திய மில்லாமையாலே, காக்கவல்லவீரர்களைத் துறந்த பேதைமையை நினைந்து வருந்துவாய். ஐயோ வீரர்களுக்கெல்லாம் வீரனாகிய அக்கிலனை நாமேன் பகைத்துக் கொண்டோமென்று உன்னுடைய அற்பத்தனத்தை நினைத்து உன்னை வெறுத்துக்கொள்வாய். என்று கூறினான்.

87. இன்னணம் புகன்றெறிந்தனனிலங் கொளியுடைப்போற்
பொன்னம்புள்ளியிற் புனைந்திடும் கோலினைப்புவியிற்
பின்னரோருரையாட லின்றிருந்தனன் பெரிதும்
துன்னும் வெஞ்சினத்திறைவனும் துளங்கிலன்மனமே.

(இ-ள்.) இவ்வாறு கோபத்தாற் கூறிப்பொற்றகட்டுக்களால் நக்ஷத்திரங்கள் போல அலங்கரித்த தன்தண்டத்தை அக்கிலன் தரையில் எறிந்துவிட்டு ஒன்றும் உரையாடாமல் மௌனமாயிருந்தான். அதுகண்டு அகமம்னனும் யாதும் மனத்துணுக்கம் அடையாமல் இருந்தனன்.

(இன்னும் வரும்)

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

---

# THE MADRAS EDUCATIONAL CONFERENCE.

## THE DUTIES AND RESPONSIBILITIES OF THE TEACHER.

# வித்யா விஷயமாய்க் கூடிய மஹாசபை.

## உபாத்தியாயர் தொழிலின் மகிமையும் அவர் கடமையும்,

---

சென்னை 'டீச்சர்ஸ் கில்ட்' என்னும் வித்யாசங்கத்தின் ஆதரணையின்கீழ் இந்த மீ"-21-22-ந்தேதிகளில் சென்னை வாலிபகிறிஸ்தவசங்கத்தார்க் குரித்தான பெரியகட்டடத்தில் ஒரு

மஹாசபை கூடியது. அதற்குச் சென்னையிலிருந்தும் வெளியிலிருந்தும் அனேக உபாத்தியாயர்கள் வந்திருந்தார்கள். முதல் நாள் ரெவரெண்ட் எப். டப்ளியூ. கெல்லெட் அவர்கள் சபையங்கத்தினர்க்கு நல்வரவுகூறிப் பிரசங்கத்தார். அப்பிரசங்கத்தில் வித்யா இலாகாவில் சென்றவருஷம் உண்டான மாறுதல்களைக் குறித்துச்செப்பியபின் சென்னையில் வெகுநாளாய் வித்யா விஷயமாயுழைத்துவந்தவர்கள் பலர் அவ்வேலையை விட்டுநீங்கிப்போக நூதன உபாத்தியாயர்கள் அம்மேலான தொழிலில் பிரவேசித்து வருகிறார்களென்றுசொல்லி, உபாத்தியாயர்களின் மேலான கடமையைச் சற்று நன்றாக விளக்கிக்காட்டினார். "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவலகாலமுறையினானே," யென்றுள்ளபழைய சூத்திரத்தின் உண்மை எவ்வகையிலும் எல்லாவற்றிற்கும் பொதுவாகப் பொருந்தும் உண்மை. பழையன கழிந்துகொண்டேவருகின்றன. புதியனவும் புகுந்துகொண்டேவருகின்றன. பழையன புதியன இரண்டையும் பொருந்த இசைப்பது உபாத்தியாயர் தொழில். உபாத்தியாயர் இல்லாவிட்டால், இவையிரண்டும் பொருந்தாது முரண்பட்டுத் தனிநின்று தத்தளிக்கும். சென்றதோடுவருவதை யிசைப்பதான நிகழ்காலவேலை உபாத்தியாயர்களுடையதேயாம். உபாத்தியாயர் வேலையில் ஊதியம் மிகப்பெரிதாயில்லாவிடினும், அவர்கள் பொறுப்பும், கடமையும் வரையற்று விளங்குகின்றன. ஏனெனில் அவர்கள் இளகினமண்ணை அழகிய பாண்டமாய் வனையும் குயவனைப்போல், காலசக்கரத்தின் உதவிகொண்டு சிறுவர்களின் இளமனதைப் பின்னால் வரும் புகழ்மிகும் புண்ணியர்கள், கண்ணியர்கள், வித்வான்கள், விற்பன்னர்கள், வீரர்கள், தீரர்கள், வியாபாரிகள் தொழிலாளிகளெனப் பல பல விதமாகவிளங்கும் உண்மைமிகு உத்தம பாத்திரங்களாகச்செய்ய அடிப்போட்டு அழகிய உருவமைத்து வைப்பவர்களாக விருக்கிறார்கள். இனி வருங்காலத்தில் இத்தேசத்தின் நிலைமையே இவர்கள் தலைப்பொறுப்பாக நிற்கின்றது. இவர்களுடைய தொழிலின் பொறுப்பு உண்மையில் உள்ளாய்ந்து நோக்கில் தாய்மார்களின் பேரன்பு நிறைந்துள்ள புண்ணியத்தொழிலுக்கிரண்டாவதாய், அதற்கு அடுத்து நிற்கும் ஆதரவுபெற்றதாய் இருக்கின்றது. தாய்மார்கள் தங்களுடைய சுத்தஹிருதயம் சுசீலநடத்தை பேரன்பு புண்ணியசிந்தை இவை போலின்னுமுள்ள அரும்பெருங்குண விசேஷங்களால் புண்யாத்மாக்கள் ஜன்மமெடுக்கப் புனிதக்ஷேத்திரமாக விளங்குகிறார்கள். அப்படி அவர்கள் வயிற்றில் அவதரித்துப் பிறந்துவளர்ந்த புண்யசீவன்கள் தங்களில் உள்ளொடுங்கியிருக்கும் பூர்ணசக்தியை வளர்த்து வெளியாகச் சாதன சாதக சாத்திய வள்ளலாயிருந்துதவி அவர்களைத்தாயன்போடுபோற்றி வளர்பிறை போலுமவர்கள் இளமனதைத் தினேதினே கலைசேர்ந்து வளரச்செய்து பூரணசந்திரன் போல் அவர்கள் மனம் மதியொளி விளங்கப் பிரகாசிக்கச் செய்வோர் உபாத்தியாயர்கள். ஆகையால் இவ்விதபுண்ணியகடன் செலுத்தும் புமான்கள் புனிதாத்மாக்களாக விருக்கவேண்டியதவசியம். ஆதியில் அகத்தூய்மையால் ஆத்மவித்யாசம்பன்னராய் விளங்கிய ஆரியபுருஷர்களே அரசிளங் குமாரர்முதல், அடிசிற்பிச்சையெடுத்துண்ணும் வித்யாவித்துக்களாகிய பிராமணச்சிறுவர் தலையாக, வைசியகுலதிலகர்களான ஐசுவரியவான்களின் புத்திரர்களீறாக எல்லாருக்கும் அவரவர் ஸ்திதிமதிவிசேஷங்களுக்குத் தக்கவாறு வித்யாப்பியாசம் செய்விக்கும் மாக்ஷிமை பெற்றுள்ளாராய் விளங்கினார்கள். ஆங்கிலேய அரசாக்ஷி இந்தியாவில் ஸ்திரப்பட்டு இங்கிலீஷ்படிப்பு தலையெடுக்கக்கிளம்பிய காலத்தும் இவ்விராஜதானியில் இள

மைப்பருவமுள்ள வாலிபர்களுக்கு வித்யாப்பியாசம் செய்யும் கடமைபூண்டு விளங்கியவர்கள் கண்ணியம் நிறைந்த புண்யாத்மாக்களாகவே யிருந்தனர்கள். மிஸ்டர் பௌவல் என்ன, மிஸ்டர் போர்ட்டர் என்ன, நம்மவரெல்லாங் கொண்டாடும்நலமிகு புண்ணியராம் ஸ்ரீகோபாலராயரென்ன, தற்காலத்தில் தன்னந்தனியராய்ப் பூரணசந்திரன்போல் புகழ்ப்பிரகாசிக்க விளங்கும் டாக்டர் மில்லர் என்ன, இவர்கள் எல்லாரும் உள்ளப்பெருமை நிறைந்து உத்தம வித்யா சம்பன்னர்களாகிய புண்ணிய புருஷர்களே யல்லவோ? இவர்கள் உத்தமசிந்தையும் உந்நத எண்ணங்களும் உள்ளத்தெளிவும் இவர்களையடுத்து வித்யாப்பியாசம்செய்து விற்பன்னர்களான வாலிபர்கள் இப்பொழுது பேரும்புகழும்பெற்று பிரதமஸ்தானங்களில் பிரபலர்களாகவும் புனிதகுண சீலர்களாகவும் விளங்குவதால் பிரத்தியக்ஷமாகத் துலங்கவில்லையா? இப்படிப்பட்ட உத்தம குணசீலர்களை உதாரணமாக வைத்துக்கொண்டு ஒவ்வொரு உபாத்தியாயரும் இவர்கள் வழிபற்றிச்செல்லவிரும்பி உண்மையினுழைக்கக் கடமைப்பட்டவர்களா யிருக்கிறார்களென்று மிஸ்டர் கெல்லட் அவர்கள் ஆத்மசிந்தை நிறைய ஆர்வமிருந்து உள்ளங்குழைந்து உண்மை பெருகக்கேட்டோர் மனதைக்கவரும் மதிநிறைந்த வார்த்தைகளால் பிரசங்கமாரி பொழிந்து பேசினர். இப்படி பொதுவாய்ச் சொல்லவேண்டியதைச் சொல்லிப், பிரத்தியேகமாகச் சொல்ல வேண்டியதைக்குறித்துப் பேசுகையில், சென்றவருஷத்தில் எல்லாரும் அவரவர் துறையில் அதிசிரத்தையோடுழைத்து விருத்திவிளங்க வுழைத்து வந்தார்கள் என்றுசொல்வது எல்லாரும் ஏற்றுக்கொள்ளத்தக்க தாயிருக்குமென்று சொன்னர்.

"அடுத்தவருஷத்தில் கவனிக்கத்தக்க வித்யா விஷயங்கள் என்னமாயிருக்குமோ ஏதாயிருக்குமோ சொல்லச்சாத்தியமில்லை. ஆனல் ஒரு விஷயம் மட்டும் மிகமுக்கியமாய் கவனிக்கப்பட்டு வருகிறது, அது இன்னும் விசேஷமாய் கவனிக்கப்படவேண்டியதா யிருத்தலால் எல்லா உபாத்தியாயர்களும் இவ்விஷயமாய்க் கவனமெடுத்துக்கொண்டு ஒவ்வொருவரும் பிரித்தியேகமாகப் பாடுபட்டுழைக்கவேண்டு"மென்று வற்புறுத்திக் கூறினர். வித்யாவிஷயத்தில் மதசம்பந்தமானதும் நன்னடத்தையை விர்த்திசெய்வதுமான அம்சம் மிகவும் கவனிக்கப்பட்டுவருகிறது என்று சொன்னர். "சத்தியமின்றிச் சன்மார்க்கமில்லை"யால் இதனுண்மையை யுணர்ந்தோர் யாவரும் மதம்வேறு நடத்தைவேறு என்று ஒன்றைவிட்டொன்று பிரிக்கத்தக்கதாகப்பேதித்துப் பேசார்கள். மதம் என்றால் என்ன? எண்ணம், உள்ளுணர்வு, மார்க்கம். இவை யெல்லாம் ஆத்மதத்துவத்தை யுணரும் வழியையே குறிக்கும் ஒருபொருள் பலசொற்கிளவிகளாம். நடத்தை யென்றாலும் ஒழுகும்வழி, செயல்களினால் விளங்கும் மார்க்கம் என்பதே பொருளாம். இதையே சன்மார்க்கம் என்பார்கள். உற்று நோக்கி உள்ளாராய்ந்தால் மனிதனுக்கு நற்கதிபயக்கும் செயல்கள் எவையோ அவையே நன்னடத்தை, நன்மார்க்கம், சன்மார்க்கம் என்று சொல்லப்படவுரியதாம். மனிதனுக்குக் கடைசியாகவுள்ளது கதி-மோக்ஷமே. "கதி-மோக்ஷம்" இல்லாதவன் கடையரினும் கடையனவன். மதம் என்பது உள்நிலையை யுணர்த்துவதானல் நடத்தை புறநிலையை யுணர்த்துவதாம். இதையே உட்சமயம், புறச்சமயம் என்று சொல்வர். இக்காலத்து மனோதத்துவ சாஸ்திரிகளும் உள்ளத்துணர்வாம் எண்ணம் எப்படியிருக்கிறதோ அப்படியேயிருக்கிறது நடத்தையும் என்று

ஆராய்ச்சி முறையால் அறிந்துணர்ந்து தீர்மானித்திருக்கிறார்கள். ஆகையால் தெய்வசிந்தனையின்றி நன்னடத்தை யுண்டாகச்செய்யலாமென்று சொல்லுவோர் உண்மையறியாது உளருகிறவர்களாவார்கள். தெய்வமென்றால் காட்டேறி, கருப்பண்ணன், கற்சிலை, மரச்சிலையென்று நினைக்கிறார்கள் இவர்கள். அப்படியல்ல. உண்மையாகவுள்ள தெய்வம் ஒன்றே. அதுவே **ஆத்மா**. பரமாத்மாவென்றும் ஜீவாத்மாவென்றும் சொல்வதெல்லாம் தோற்றம் பற்றிச் சொல்லியவார்த்தைகளாம். விக்ரகங்களில் ஆவாகனம் செய்யப்பட்டுள்ள ஆத்மசக்தி தெய்வமேயன்றி அதைத்தள்ளிப்பார்க்கும் ஸ்தூலவிக்ரகம் தெய்வமாகமாட்டாது. சூக்ஷ்மப் பார்வை யில்லாதவர்கள் உளக்கண்திறக்கப்பெறும் வரையில் உண்மையாக ஆத்மசிந்தனை செய்ய அசக்தர்களாயிருப்பதால் அவர்கள் ஸ்தூலபாவனையால் சிந்தித்து உள்ளன்பு நிறைந்து உளம்பெருகி மனங்கரைந்து உளக்கண்திறக்கப் பெறுவதற்குச் சாதனமாக வேற்பட்டவையே கோயில், குளம், தீர்த்தம், க்ஷேத்திரம், திருநாள், மந்திரம், தந்திரம் முதலிய எல்லா உபாயங்களும். கடவுள் எல்லாம் கடந்தவராகையால், அவரைக்கண்டு தரிசிக்க விரும்பும் சற்சனர் தத்துவங்களையெல்லாம் அனுபவத்தால் கண்டுகடந்து செல்லல்வேண்டும். அப்படிக் கடந்து செல்வதற்காக வேற்பட்ட மார்க்கங்களே எல்லாமதங்களும். மதங்களெல்லாம் சாதன வழிகளேயன்றிவேறல்ல. ஆனால் சித்திகிடைக்கும் வரையில் சாதனமே சித்தியாகபாவிக்க வேண்டிய தவசியமாதலால், சாதனத்தைப் பழிப்பார்க்கு சித்திகிட்டாது. இது ஒரு உண்மையான மனோதத்துவம். விளையாட்டில் உண்மையாக மனம் பதிந்து விளையாட்டையே வினையாக நினைந்து நடக்காத குழந்தை விளையாட்டுப்பருவம் நீங்கியபின் வினையாகவரும் உயிர்வாழ்க்கையை உள்ளபடியனுபவிக்கத் தெரியாதுழலும். விளையாட்டும் வினையும் கருவிகளாம் சொப்புமரப்பாய்ச்சிகளில் இல்லை. அவைகளை யுபயோகிக்கும் சீவன்களுடைய அறிவு முதிர்ச்சியையும் அனுபவ விசேஷத்தையும் பொறுத்ததாம். அறிவு பிறக்காத அனுபவமற்ற சிறுவர்களுக்கு உண்மையில் குழந்தையாகவும், வீடாகவும், வாசலாகவும் படும் மரப்பாய்ச்சி, மணல்வீடு முதலியவை அறிவுபிறந்து அவைகளின் உண்மையான அனுபவம் சித்திக்கப்பெற்ற பெரியவர்களுக்கு விளையாட்டுக் கருவிகளாம். அப்படிப் போலவே கோயில் குளம், தீர்த்தம் க்ஷேத்திரம், வேதம் சாஸ்திரம், மந்திரம் தந்திரம் முதலியவை ஆத்மஞானமுதித்து ஆத்மானுபவ சித்திபெற்றவர்களுக்கு உண்மைக்குச் சின்னமாயுதவும் விளையாட்டுக்கருவிகளாம் ஆத்மானுபம் பெற்றபெரியோர், யேசுகிறிஸ்துவைப்போலவும், திருமூலர், மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர் முதலான சைவசமயாசாரியர்களைப்போலவும், வேதமோதிய விப்ரசிகாமணிகளாம் பூர்விக ருஷிகளைப் போலவும் "கடவுளும் நானுமொன்றானேன்" என்று கடவுளோடு ஐக்கியப்பட்டு நின்று இப்பிரபஞ்ச வாழ்வனைத்தையும் ஓர் விளையாட்டாகப் பார்த்துநிற்பார்கள். அவர்கள் வழிபட்டு நாம் அந்த கதியடையும் வரையில் அதற்குச் சாதனமாக வேற்படுத்தியுள்ளமார்க்கங்களாம் அவரவர்கள் மதத்தையே பெரிதாகவும் பூர்ணமானதாகவும் நம்பி நடக்கவேண்டும். இந்த மட்டிற்கு எல்லாரும் தத்தம் மதமேபெரிதென்று கொண்டாடுவது இயல்பும் அவசியமுமாயினும் பிறர் மதத்தை யிகழ்ந்து புன்மொழிகள் பேசி அம்மதப்பற்றுள்ளோர் மனநோவச்செய்வது மஹாபாதகமாம். ஆகையால், கிறிஸ்துமதப்பற்றுள்ளவர்கள் அவர்கள் மதத்தைப்பற்றிச் சிலாகித்துப்பேசும்பொழுது அப்படிப் பேசுவதினாலேயே நம

மதத்தை யவர்களிகழ்ந்ததாக நினைக்கலாகாது; அவர்களுக்குத் தம்மதம் எப்படியோ அப்படியே நம்மதம் நமக்கு அருமையானதாம். தம்மதத்திற்குமிஞ்சி வேறில்லையென்று நினைப்பர் உண்மையான மதப்பற்றுள்ளோர். இந்த உள்மர்மத்தை யுணர்ந்தோர் கனம்பொருந்திய கவர்னர் லார்ட் **அம்தில்** அவர்கள் இராஜமகேந்திரத்தில் மதக்கல்வி சம்பந்தமாகப் பேசினபோது தம்மதத்தைச் சிலாகித்துப் பேசினதை யொருகுற்றமாக வெண்ணமாட்டார்கள் மதப்பற்றே யில்லாதவர்களா யிருத்தலைவிட ஏதோ தெய்வமொன்றிருக்கிறதென்று நம்பியிருக்கிறவர்களை உண்மையான மதவழியில் திருப்புவது எளிதுதானே. அவருக்கு உண்மையான மதம், அவர் பிறந்து வளர்ந்து, உள்ளத்திற் சிந்தித் துபாசித்து வரும் கிறிஸ்து மதமேயா மாகையால் அதையே உண்மைமதமாகச் செப்பினர். அப்படிச் சொன்னதினால் அவர் உண்மையான மதசிந்தனை யுள்ளவர் என்று மட்டும் வெளியானது சரியாகச் சொல்லலாமேயன்றி, அவர் தம்மதிகாரமுறையில் தம் செல்வாக்கை துர்விநியோகப்படுத்தி ஹிந்துக்களை யெல்லாம் கிறிஸ்தவர்களாக்க எண்ணியிருக்கிறாரென்று நினைப்பது சுத்த மௌடீகமே. இப்படியே ஹிந்துக்கள் நினைப்பார்களென்று கல்கத்தாவில் பிரசுரமாகும் **இங்கிலீஷ்மான்** பத்திரிகை விஸ்தரித்து எழுதியது சுத்தப்பிசகு. அதை ஹிந்துப் பத்திராசிரியர், உண்மையை விளக்க ஒரு பிரயத்தனமும் செய்யாது ஹிந்துவின் ஒரு பக்கத்தில் அப்படியே யெடுத்தச்சிட்டு வாளாவிருந்ததும், **இங்கிலீஷ்மான்** பத்திராசிரியர் ஹிந்துக்களை உண்மையறியும் உள்மதப் பற்றற்ற மூடசிகாமணிகள் என்று நினைந்தெழுதியதை ஒருவாறு உறுதிப்படுத்தினது போலுமாயிற்று.* இந்தத் தப்பெண்ணத்தை நிவர்த்திக்க ஆரிய மதசிகாமணியாகிய நமது திவான் பஹதூர் ஆர். இரகுநாத ராயரவர்கள், எல்லாப் பத்திரிகைகளிலும் நமது கவர்னர் செய்வது சரியென்றும் அவ்வார்த்தைகளினால் அவரைப் பற்றித் தப்பெண்ணங் கொள்ள இடமில்லை யென்றும், நம்மவர்களில் இங்கிலீஷ் படித்த மேதாவிகளாய் விளங்குமவர் தாம் பிரத்தியேகமாக நியமித்துள்ள பாடசாலைகளிலும் ஹிந்து மதக்கல்வி போதிக்காதிருப்பது அவர்களுக்கு உண்மையான உள்மதப்பற்றில்லை யென்று லார்ட் அம்தில் சொன்ன வார்த்தை சரியென்று சொல்லத் தக்கதாயிருக்கிறதென்றும் எழுதியிருக்கிறார். இதற்காக உண்மையான உள்மதப் பற்றுள்ளவ ரெல்லாரும் இவருக்கு மிகவும் கடமைப் பட்டவர்களாக விருக்கிறார்களென்பது நாம் சொல்லாமே யமையும்.

மிஸ்டர் கெல்லெட் அவர்கள் அவர் செய்த பிரசங்கத்தில் இந்த மத விஷயத்தைப் பற்றிப் பிரமாதமாகச் செய்த பிரசங்கமானது வித்யா விஷயமாய்க் கூடிய கூட்டத்திற்கு அவர் தம் கோயிலிற் செய்யும் மதப்பிரசங்கம் செய்தது போலிருந்ததென்று ஹிந்துப் பத்திரிகை யெழுதி யிருத்தலால் அவருடைய உள்ளத்தையறிய உண்மையை யுள்ளவாறு சிந்தித்துணர்தல வசியமா மென்று இது விஷயமாய் இவ்வளவு விவரித்தெழுதலானோம். நமது கிறிஸ்தவ பாதி

* இந்தக் குறையைப்பிந்தி 'டைம்ஸ் ஆவ் இந்தியா' பத்திரிகை 'இங்கிலீஷ்மான்' பத்திராசிரியர் தம்மபிப்பிராயத்தைக் கண்டித்து கவர்னர் செய்கையைச்சரியென்று கூறியதைப் பிரதமஸ்தானத்தில் பதிப்பித்துத் தீர்த்துக்கொண்ட ஹிந்து பத்திராசிரியர்க்கு வந்தனம் சொல்லவேண்டியவர்களா யிருக்கிறோம்.

ரிகள் அவர்கள் மதத்தைப் பற்றிச் சொல்வதெல்லாம் குற்றமற்றவையாக விருப்பினும் பிற மதங்களினுண்மையுணராது அந்நிய மதங்களை யிகழ்வதே தங்கள் மதத்துக்கு ஒரு புகழ்ச்சியாக நினைப்பது சுத்தப் பிசகு. அது அவர்கள் அறியாமையால் செய்யும் காரியமாதலால் அதை நாம் நிராகரித்துத் தள்ளவேண்டிய தொழிய மற்றப்படி பாராட்டத் தக்கதல்ல. "மனக்கடல் ஏழு" என்று குறிக்கப்பட்ட 'ஸப்தஸமுத்திரத்தை' ஸ்தூலார்த்தம் செய்து கொண்டு டாக்டர் மர்டாக் ஒரு புஸ்தகத்தில் உளறியிருந்ததையே, பண்டிதை இராமாபாய் பெங்களூரில் செய்த ஒரு பிரசங்கத்தில் ஹிந்துமத சிரேஷ்டர் நடுவில், ஹிந்து கனவான் ஒருவர் அக்கிராசனாதிபதியாயிருக்க எடுத்துச்சொல்லி ஏளனமாய்ப் பேசிப் பிதற்றினதாகப் பத்திரிகைகளால் தெரியவருகிறது. இதனால் இந்தப் "பண்டிதை"யினுடைய சம்ஸ்கிருத வித்தையின் வெள்ளல் வெளியாயிற்றேயன்றி ஹிந்து மதத்துக்கு ஒரு குறைவும் வரவில்லை. கிறிஸ்து மதத்துக்கும் இதனால் வந்த சிறப்பு ஒன்றுமில்லை. ஆனால் இவர் கிறிஸ்துமதப்பற்றுள்ளவரேயன்றி கிறிஸ்து வழிபற்றி அவர் பெற்ற பெருங்கதியடைந்திலர் என்று ஸ்பஷ்டமாய் வெளியாகிறது. இப்படி அரைகுறையாகக் கற்றும் கேட்டும் ஸ்வானுபவமின்றிப் பிதற்றுமிவர் வார்த்தைகளைக் கேட்கும்போது உண்மையான உள்மத சிந்தனையும் ஆத்மானுபூதியுமுள்ள பெரியோர் அவர்கள் மொழியை நினைந்து குற்றம் பாராட்டாது, தானீன்ற குழந்தை தன் இன்னமுதவாய்திறந்து தேனொழுகும் மழலைச்செல்லால் தன் தாயையே நிந்தித்தால், அவள் எப்படி அச்சொல்லிலுள்ள குற்றத்தைச் சிறிதும் பாராட்டாது,

"குழலினிது யாழினி தென்பர் தம்மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்"

என்று சொல்லியவாறு அக்குழந்தையின் மழலைச் சொல்லில் செறிந்து கிடக்கும் இன்னமுத ரசத்தைமட்டும், நீரினின்று பாலைப்பிரித்துப் பருகும் அன்னத்தைபோல், கிரகித்து மகிழ்வளோ அப்படி மகிழ்வார்கள். இவர்கள் மௌனத்தின் தன்மையறியாத அகம்பாவ சிந்தையர் அடங்காக் குழந்தை இடுக்கண் விளைத்துக் கெடுவதுபோல் கெட்டுப்போவார்கள். உத்தம பாவமுள்ளவர்கள் உண்மையறிந்து உய்வார்கள்.

இது விஷயம் மிக வளர்ந்து விட்டதால், இனி, உபாத்யாயர்கள் கையாளவேண்டிய கடமைகளையெல்லாம் முத்திறமாக்கி மூதறிவோடும் மிஸ்டர் கெல்லெட் சொல்லிய வசனங்களைமட்டு மெடுத்துச் சொல்லி இதை முடிப்போம். அவர் முத்திறப் படுத்திச் சொல்லிய உபாத்யாயரின் மூவகைச் சிறப்பு மென்னவெனில்:—

(1) பழையன புதியன விரண்டையும் பொருந்த வமைக்கும் புண்ணியத்தொழில் அவர்களுடையது. இவைகள் வேறுபட்டு விளங்குவது "வெறிவெய்விதானு" என்று பலவிதப் பயித்தியங்களுக் கிடமாகும்.

(2) இரண்டாவது, இந்தியாவில், மிக வித்தியாசப்பட்டு விளங்கும் பலஜாதிகளை நடுவிலிருந்து பொருந்த வைக்கிற தொழில் உபாத்யாயருடையதாயிருக்கிறது. கீழ்த்திசை நாகரிகமும் மேற்றிசை நாகரிகமும் உபாத்யாயர் மத்யஸ்தமும் ஊக்கமும் உழைப்புமின்றி ஒன்றோ

டொன்று பொருந்தா. பிரிடன் தேசத்து ஆங்கிலேயரையும் இந்துதேசவாசியாகிய ஹிந்துவையும் பொருந்த இசைப்பதும் இவருதவியின்றி யாகாது.

(3) கடைசியாக, உபாத்யாயர் உண்மையாகவே உயிர்வாழ்க்கைக்கு வழி விட்டுக் காட்டும் வாழ்க்கை யுபகாரிகளாக விருக்கிறார்.

மூன்று விதமாய்ப் பிரித்துச் சொல்லிய இந்த முக்கடனையும் செலுத்த உபாத்யாயர் புனிதசிலராக விருக்கவேண்டிய தவசியமாதலால் முதலாவது உபாத்யாயர்கள் தங்களைப் புனிதராக்கிக் கொள்ளப் பாடுபட வேண்டுமென்று மிகவும் வற்புறுத்திக் கூறினார். இந்தப் புண்ணிய காரியத்தில் மேற்றிசையில் பிரதமஸ்தர்களாக விளங்கிய ப்ரோபெல், பெஸ்டலோஜி இவர்களை, மேற்றிசை நாகரிகத்தார் மனமொப்பவேண்டிப், பின்பற்றி, இவர்கள் போதித்த நித்தியமாய் விளங்கும் உண்மைக் கொள்கைகளை அனாதிதொட்டு விளங்கும் ஆர்யமதக் கொள்கை பற்றி ஹிந்துக்கள் எளிதி லுணருமாறு இத்தேச வழக்கங்கள் பழக்கங்களைக் கொண்டு "எம்மதமும் சம்மதமாய்க்" கொள்ளும் ஸத்யம் விளங்கத் தெளியக்காட்டும் உதவிசெய்வதே தன் தலைமேல் விழுந்த பாரமாகக்கொண்டு சென்ற ஒருவருஷகாலமாக இந்த விவேகசிந்தாமணி இது விஷயத்தில் முனைந்து நின்று கடவுள் கிருபைகொண்டு நடத்தி வருகிறோம். இப்படி நாம் செய்துவரும் முயற்சியே வித்யாவிஷயத்தில் போதனாசக்தி மிகுந்தவரும் வித்யா இலாகாதாரர் உண்மை யறிந்தொழுகுபவரும், வித்யா விற்பன்னராலும் வித்யார்த்திகளாலும் ஒருங்குகொண்டாடப்படும் உத்தமகுணம் வாய்த்தவருமான ஒரு சிறந்த உபாத்யாயரால், வித்யாவிஷயமாய்க்கூடிய மஹாசபைமுன், அவர் உடன்உபாத்யாயர்களுக்குப் பெரிதானதாகச் சிறப்பித்துச் சொல்லப்பட்டதால் நமது உண்ணோக்கம் உள்ளபடி தக்கவர்களால் அங்கீகாரம் பெற்று நிகழநேரிட்டது நமக்கு உளமகிழ்ச்சியை யுண்டுபண்ணி உற்சாக மூட்டுவதாயிருக்கிறது. அடுத்தநாள் கூடிய சபையில் நமது நூதன வித்யா இலாகாத்தலைவரான டாக்டர் போர்ன் அவர்கள் அக்கிராசனாதிபதி யாயிருந்துசெய்த பிரசங்கத்திலும் மதக்கல்வியின் அவசியத்தைப்பற்றி வற்புறுத்திக் கூறினார். கனம்பொருந்திய கவர்னர் அவர்களும் இது விஷயமாய் நெல்லூரிலும் இராஜமகேந்திரத்திலும் அவர் உள்ளக்கருத்தை ஒளிக்காது வெளியிட்டுப்பேசி, மதக்கல்வியினவசியத்தை வற்புறுத்தினதன்றி இதைப்பற்றி அவர் உண்மையில் அதிக சிரத்தை பூண்டவராக விருக்கிறாரென்றும் காட்டியுளார். 'மதக்கல்வி' யென்றால் "எம்மதம் உம்மதம்" என்று ஒவ்வொரு சமயத்தாரும் சண்டைபோட்டுக்கொள்வதால் இவ்வித்யாசத்துக்கும் அதனால் விளையும் வில்லங்கத்துக்கு மிடமின்றி எல்லாமதங்களுக்கும் பொதுவாயுள்ள உண்மையான உட்சமயக்கொள்கைகளை விளக்கும் ஆத்மவித்தையை 'எம்மதமும் சம்மத'மென்று கொண்டுள்ள கவர்ன்மெண்டு கொள்கைக்கு ஒத்ததாய் ஒரு பக்ஷமும் சாராது உண்மைநிலை நின்று பரங்கருணையே துணையாக்கொண்டு பலபல விதமாகவுமெடுத்து பகிரங்கமாக விளக்கி வருவோம். ஸத்யமேவிதி, ஸத்யமேகதி, ஸத்யமே ஜெயம்.

ஓம். தத். ஸத்.

* "NEW THOUGHT PRIMER."

## நவீனமத சித்தாந்த ஸங்கிரகம்.

"பழையனகழிதலும் புதியனபுகுதலும்
வழுவலகால முறையினானே."

ஆதலால் நித்திய முத்த பரிபூர்ண சச்சிதானந்தப்பழம்பொருளாகிய ஸத்யம் ஒன்றுதவிர மற்றப்படிக்குள்ள கால தேச வஸ்து பரிச்சேதங்களுக்குட்பட்ட எல்லாப்பொருள்களும் பரிணாமவிதிப்படி சதா தோன்றுவதும், வளர்வதும், மாறுவதும், தேய்வதும், அழிவதுமாகிப் பின்னும் பின்னும் இம்முறைபற்றியே தோன்றி மறையுந் தன்மை வாய்ந்தனவாக விருக்கின்றன. இது பிரகிருதி ஸ்வபாவம். இதை ஸம்ஸ்கிருதத்தில் பரிணாமம், 'பரிணாமவிதி' என்று சொல்கிறார்கள். இங்கிலீஷில் 'Evolution' என்றும் 'Law of Evolution' என்றும் சொல்கிறார்கள். இந்த விதி இப்பரதகண்டத்தில் அனாதிதொட்டு வேத[illegible]ண்டானது முதல் சித்தர் முத்தர்களாலும் [illegible]ம தரிசனம் கிடைக்கப்பெற்ற இருஷிகளாலும் பிரத்தியக்ஷானுபவ ரீதியாக வுணர்ந்து குருபரம்பரையாக முறைதவறாது உபதேசித்தாளப்பட்டு வந்திருக்கிறது. பண்டிதர்கள் இதை நான்முகமாக அறிந்தாலும் இவ்வுண்மையெல்லாம் அந்தர்முகதரிசனத்தாலும் உள்ளனுபவ உணர்வினாலுமே யறியக்கூடியதாகையால், ஆத்மஞானமுதித்து ஆத்மானுபவசித்தி பெற்றவரன்றி மற்றவர்கள் இதை முற்றும் கற்றும், கற்றபடி நின்று பார்க்கத்திறனில்லாக்காரணத்தால் உள்ளபடி யுணரமாட்டாது சற்றேறக்குறைய இட்டுக்கட்டிச் சட்டதிட்டமாய் ஒருவாறு சொல்லிக்கொண்டு திரிவர். முற்றுமுணர்ந்த மூதறிஞர்களோ, இவ்வுண்மைவிதிமுற்றும் ஸ்வானுபவ ரீதியாக அறியக் கூடியதாயிருப்பதுணர்ந்து, அடையாளத்துக்கு அங்குமிங்குமாகச் சிலவற்றைக் குறித்துவைத்து மற்றதைக் குருமுகமாகக் கேட்டுக்கொள்கவென்று சொல்லிவிட்டனர். இது காரணம்பற்றியே வேதங்களை குருமுகமாகப் பயின்றாலன்றிப் பிரயோஜன மில்லையென்று சொல்லுவர்.

மேற்றிசையில் இந்தவுண்மை யேசுகிறிஸ்து போன்ற தீர்க்கதரிசிகளுக்குத் தெரிந்ததாயிருப்பினும் அவர்கள் அனுபவரீதியாக பரிபக்குவ ஜீவன்களுக்குப் போதித்தார்களேயன்றி இக்காலத்துப் புத்தகமெழுதும் கிரந்தகர்த்தர்களைப்போல் வளர்த்தி வளர்த்தி நியாயாநியாய விதண்டாவாதங்களுக்கு ஆக்ஷேபசமாதானஞ்சொல்லி யெழுதி வைத்தார்களில்லை. ஆதலால் அவர்கள் வார்த்தைகளும் அவர்கள் சொற்கேட்டு உபதேசபலன் பெற்றவர்களால் உலகோபகாரார்த்தம் எழுதிவைத்தவர்கள் கைப்படக்கிடைத்தவையன்றிமற்றவையொன்றுமில்லை. இப்படி அவருடைய சீடர்களில் நால்வர் குறித்துவைத்ததையே கிறிஸ்தவர்கள் சத்தியவேதமென்று கொண்டாடுகிறார்கள். சத்தியத்தைவிளக்குவதெல்லாம் சத்தியவேதமாதலால் அவர்கள் கிறிஸ்துவின் போதனைகளை அப்படிக் கொண்டாடுவது சரியே.

"எழுதாப்பொத்தகத் தேட்டின்பொருளைத்
தெருளாதகன்னி தெளிந்திருந்தோத"

என்றபடி அகம்பாவமழிந்து ஆத்மாவிலொடுங்கியமனதினாலேஉள்ளறிவாயிருந்துணர்ந்து அப்பியசித்து, அப்பியாசமுதிர்ச்சியினால் அப்படி "அறிந்த அறிவும் அழிய" ஸ்வானுபவம் சித்தித்த 'நிலைகளெல்லாங் கடந்த நிலையில்' இந்த

* Origin, History & Principles of the Movement known as New Thought by Henry Harrison Brown, Now Folk San Francisco, U. S. A pp 84. Price 25 cents.

உண்மையில் ஒன்றுபட்டு நிற்பதே இதை யோதும் வழியாம். "எழுதாத பொது அகமாகிய" ஹிருதயமத்தியாம் சிதாகாசம் என்னும் ஏட்டில் எழுதாமலெழுதி வைத்திருக்கும் சூக்ஷ்மாதிசூக்ஷ்மமான சூக்ஷ்மப்பொருளை புலனறிவுக்கெட்டாத புனிதவடிவின் சின்னமாம் "கன்னி" யாயிருந்துதெளிவுற்றுஓத, சற்சிஷன் சூக்ஷ்மாதிசூக்ஷ்மத்திலும் சூக்ஷ்மமாயிருந்து நுண்ணறிவா லுணர வேண்டும். குருபரம்பரையாகவே இந்தவுண்மை எப்போதும் வெளியாகிப் பாவி வரத்தக்கது. அப்படியே அநாதி காலந்தொட்டுப் பரவிவந்தது இன்றைக்கும் பரவி வருவதாயிருக்கிறது. இதைப்பற்றி "ஏட்டின் புறத்தில் எழுதிவைத்தென்பயன்!" ஆதலால் இம்மட்டு நிறுத்தி மேற்றிசையார் புத்தி விசேஷத்தாலுண்டான விஜ்ஞானசக்தியால்பகிர்முக ஆராய்ச்சி செய்து இவ்விதியைக் கண்டு பிடித்ததே வித்வான்களுக்கும் கல்விமான்களுக்கும் உலகத்தாருக்கும் ஒப்பாயுள்ளதால் இந்தவிதியினுண்மையை ஒருவாறு விஸ்தாரமாய் ஆராய்ந்தறிந்து கண்டு விளக்கிய டார்வின் என்பவர் காலமுதலே இப்பரிணமவிதி உலகசம்மதமாக ஏற்றுக் கொள்ளப்பட்டதாகக் கொள்ளப்படுகிறது. டார்வின் இதை பகிர்முகமாகக்கண்டு பிடிக்கக்காரண பூதராயிருந்தாராயினும் அவர்கண்டுபிடித்த வுண்மைகள் சென்ற 40 அல்லது 50 வருஷகாலத்தில் அதிகமாக மேன்மேலும் திருத்தி வளர்த்தி அவர்வழிபற்றிச்சென்ற சாஸ்திரவிற்பன்னர்களால் விர்த்திக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. தேகமேயெல்லாம், புலனறிவே அறிவு என்று நம்பியிருக்கும் (Materiatistic school) லோகாயத மதப்பற்றே மிகுதியுமுள்ள மேற்றிசையார் சிறுகச்சிறு அதிலிருந்தும் மேற்கிளம்பி இப்பொழுது "மனதே ஆத்மா: தேகம் மனதின் விகாரமேயன்றி வேறல்ல" என்கிற உத்தமசித்தாந்தத்துக்கு வந்திருக்கிறார்கள்.

இந்தசித்தாந்தம் இந்தியாவில் புராதனமானதேயாயினும், மேற்றிசையார் மிலேச்சர்களா யிருந்ததுபோய் நாகரிகர்களாயிருக்கத் தலைப்பட்ட பிறகு இவ்வித சித்தாந்தங்கொள்ளத் தலைப்பட்டது புதுமை யாதலால இதை "நவீனமதம்" அல்லது நூதன சித்தாந்தம் என்றுபொருள்படும் "New Thought" என்னும் பேரால் வழங்குகிறார்கள். இந்த சித்தாந்தம் இங்கிலாந்து முதலான ஐரோப்பிய தேசங்களில் விசேஷமாக ஜெர்மனியில் தலைக்கிளம்பித்தளிர்விட்டு இளங்கொழுந்தாய் விளங்கி வளர்ந்தது. இப்பொழுது இந்த எண்ணம் அமெரிக்காவில் பலநாமங்களால் விளங்கும் பலபகுதியாரால் "New Though[t] Movement"—நவீனமதக்கொள்கை விலாஸ[ம்] என்று பொருள்படும் பெயர் கொடுத்துக் கொண்டாடப்படுகிறது. இந்த நவீனமதக் கொள்கையுள்ளோர்களில் மிகவும் மேலா[ய்] விளங்குவோர் பெரும்பாலும் நமது தே[சத்தி]ந்த சித்தாந்தக் கொள்கைகளின் உள்த[த்து]வத்தையே உண்மையென்று கொண்டாடுகிறவர்களா யிருக்கிறார்கள். ரால்ப் வால்டோ எமர்ஸன் (R. W. Emerson) என்னும் மஹான் சுத்தாத்வைத சித்தாந்த சிரேஷ்டர். விஷ்ணு புராணம் பகவத்கீதை இவற்றின் உட்கருப்பொருளை மேற்றிசையார்புத்திக்கும் வித்தைக்கும் கொள்கைக்கு மிணங்க உண்மைக்குப்பங்கம் வராது வெகு அழகாக எடுத்துச்சொல்லியிருக்கிறார். இவருடைய வார்த்தைகளையும் கருத்துகளையும் ஸத்யமாக நம்பி அதனல் உண்மையுணர்ச்சி யுண்டாகப்பெற்ற இவருடைய சற்சிஷர்கள் அநேகரில் (Henry Harrison Brown) 'ஹென்றி ஹாரிஸன் ப்ரௌன்' என்பவர் ஒருவர். இவர் "Now"

என்னும் நித்திய தத்துவங்களை விளக்கும் மாதாந்தரப்பத்திரிகை யொன்றுக்கு ஆசிரியராகவிருக்கிறார். இவருக்கு இப்பொழுது 63-வயது ஆகிறது. 30-வருஷகாலமாக உண்மைக்குழைத்து இப்பொழுது அத்வைதபாவம் முதிர்ந்து, அப்பியாசித்தனுபவிக்காத அறிவு அறிவோடுசேர்த்தியில்லை யென்றுணர்ந்து, தானுணர்ந்த உண்மைகளை யனுஷ்டித்து நித்திய ஜீவனம் நடத்தி வருவதன்றி உண்மையை யெல்லவருமுணரப் போதிக்கவேணுமென்கிற அவா மிகுதியால், அனேக சிறு புத்தகங்களெழுதியும் பிரசுரித்தும் பிரசங்கங்கள் செய்தும், மாணவர்களுக்குப் பாடங்கள் சொல்லியும் சத்காலக்ஷேபம்செய்தும்அதையேஜீவனோபாயமாகவும்கொண்டு நடந்துவருகிறதாகத் தெரிகிறது. இவருடைய பத்திரிகையை நாம் சென்ற ஏப்பிரல் மாசம் முதல் இடைவிடாது நன்றுகக் கவனித்துப் பார்த்துவருகிறோம். மேற்றிசைமுறைபற்றிச் சொல்லு முண்மையை இந்தியாவில் வழங்கும் உருவகமொழியில் ymbolical language) வரைந்தால் கிரகித்துக்கொள்வாரோ என்றுணர ஆனந்தத்தாய்மொழியில் சேர்த்துள்ள அர்ப்பணலிகிதம் இவருக்கு வரையப்பட்டது. அதன்கருத்தையே எமர்ஸனைக்கொண்டாடும் சிஷ்யக்கூட்டத்தாருக்கு ஆத்ம சோதரபாவனார்த்தமாய் அன்பு நிறைந்த ஆப்தவசனமாக எழுதப்பட்டது. இவைகளின் உண்மைகளை இவர் உள்ளபடி கிரகித்துக்கொண்ட விசேஷத்தாலும் இவரதுபத்திரிகையில் இவர் அத்வைத போதம் செய்யும் சாமர்த்தியத்தாலும் இவர் உண்மையான ஓர் உத்தமசித்தம் பெற்ற அத்வைதவாதியும் அப்பியாசியு மென்றுணர்ந்து இவரிடத்து ஆத்ம சோதர வாஞ்சை வைத்துள்ளோம். இவர் "நவீனமதம்" என்று சொல்லும்மதத்தின் உச்சியில் அதற்குச் சிகரமாய் விளங்கும் உன்னதகொடுமுடி சுத்தாத்வைத சித்தாந்தமாகும். இந்த நவீனமதமுண்டான விதத்தையும் இதன் பூர்வ சரித்திரத்தையும், இதற்கு ஆதாரமாயிருந்த தத்துவ ஞானிகள், மஹாகவிகள், உத்தமசித்தர்கள், உயர்பாவனாசிரேஷ்டர்கள் இவர்களையும் வெகு தோரணையாய் ஆதியோடந்தம் எளிய நடையில் தெளிவான இங்கிலீஷ் பாஷையில் சிறு புஸ்தகம் ஒன்று எழுதி அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். இப்புத்தகத்தின் 57-வது பக்கத்தில் இந்த 'நவீனமதம்' வெளித்தேசங்களிலும் பரவி வருவதைப்பற்றிச் சொல்லுகையில் இதரதேசங்களிலிருந்து வரும் "நவீன மதக் கொள்கைகள் நிறைந்த பத்திரிகைகளில்' இவ் **விவேகசிந்தாமணியும்** ஒன்று என்றுசொல்லி இதன்பேரை வரைந்து அதைக் குறிப்பிட்டு நமக்கு அப்புஸ்தகத்தில் ஒரு பிரதியனுப்பியிருக்கிறார்.

"எம்மதமும் சம்மதமே" யென்று சொல்லிய என் தாய்மொழி விளங்க ஸர்வமதசாகரமாகிய **அத்வைத** சித்தாந்தத்தை உண்மையில் **ஸத்யத்தை** நாடிச் செல்லும் யார்தான் தம்மதம் என்று உரிமை பாராட்டிக் கொண்டாடமாட்டார். இப்பொழுது வெளியாயிருக்கும் **ஆத்மவித்யாமஞ்சரி**யி லடங்கிய **ஆனந்தத்தாய்மொழி**யின் சாராம்ஸத்தை உலகோபகாரமாக வெளியிடுமுன் அந்தரங்கத்தில் அவரவர் எண்ணங்களும் பாவனைகளு மிருப்பதற்கிணங்க இங்கிலீஷிலும் தமிழிலும் எழுதித் தெரிவித்துவந்த பொழுது, இங்கிலாந்தில் 'டெவன்ஷயர்' மாகாணத்தில் வசிக்கும் கிறிஸ்து பக்தசிகாமணியாகிய ஒரு துரைசானி நாம் நமது நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்திற் கண்ட நம் சித்தாந்தங்களை வாசித்துப்பார்த்துவிட்டு "என்! இவையெல்லாம்கிறிஸ்துநாதர் போதித்த உண்

மைகளேயன்றி வேறல்லவே!” யென்றார். ஒரு ஸம்ஸ்கிருதவித்யாபண்டிதரும் அப்படியே விவேகசிந்தாமணியில் தாம்வாசித்ததைக்கொண்டு இதில் அன்புரஸம், சோகரஸம், பக்திரஸம் முதலான ஆத்மானுபவசித்திக் கனுகுணமான நவரஸபாவங்களும் செறிந்திருக்கக்கண்டுகளித்ததாக உளம்பூரித்து உற்சாகம்பொங்க வெழுதினார். ஸ்ரீங்கேரியிலிருக்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸதானந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகளும் சத்சங்ககாலக்ஷேபத்துக்கு விவேகசிந்தாமணியில் வெளியாகும் விஷயங்கள் பரமசாதகமாகவிருப்பதை உளங்கனிந்து உண்மை நிறைந்து ஸ்ரீ நாராயண ஸ்மரண பூர்வகமாக அவர் ஆசீர்வாதங்களோடு ஆனந்தம்பொங்க அகமகிழ்ந்து அடிக்கடி ஆதரவு கூறிக் கடிதம் வரையலானார். ப்ரோபெல் என்னும் மஹானான வித்யாபோதக சிரேஷ்டர் முறையாம் கிண்டர்கார்டன் போதனாமுறையைக் கசடறக் கற்றுப் பழகியனுஷ்டித்துவரும் ஒரு வித்யாரத்னமாம் மனோன்மணி அதிலடங்கிய உண்மைகளைச் சாங்கோபாங்கமாகச் சொல்லக்கேட்டுச் செவிமடுத்துண்டு அத்வைத சித்தாந்தத்தில் அதிமோகங்கொண்டு ஆனந்த பரவசராய் அதைக்கொண்டாடலானார். இன்னும் இந்தியாவில் அதிகல்விமானும் நுட்பபுத்தி மிகுந்தவரும் உயருத்தியோகத்திலிருப்பவருமான ஒரு துரைமகனும் உருவகபாவனையிலாவது ஆத்மபாவனையிலாவது சொல்லும்மொழிகளைக் கிரகித்துக் கொள்ளாவிட்டாலும், உண்மையான உட்கருத்துகளை மனோதத்துவ ரீதியாகச் சொல்ல அங்கீகரிக்கலானார். இப்படி இன்னும் பலரும் இதனுண்மையை யுணர்ந்து ஆனந்தித்து மகிழ்ந்தனராயினும், அவரவர்கள் எண்ணமிருந்தவாறு வார்த்தைகளையும் வசனங்களையும் மாற்றி யுரைக்காமைக்காக வருந்தினர். இக்குற்றம் எப்போதும் நீங்காக்குற்றமே. ஏனெனில் இதிலுள்ள குறை அவரவர் மனத்தகத்தே இராகத்துவேஷபாவனா ரூபமாகப் பொதிந்து கிடத்தலால் அதை நீக்கிப்பார்க்கத் தெரியாத தோஷத்தால் உண்டாவதாம். இதையவர்கள் அந்தர்முக விசாரணைசெய்து அகத்தூய்மையினால் நீக்கிக்கொள்ளல் வேண்டும். அல்லது குருவையடுத்து வழிபடல் வேண்டும். இப்படியாக, உண்மை ஒருவருக்கு முரித்தானதன்று: ஆனால், எல்லவரும் உண்மைக்குரியவர்கள். ஆகையால் அவர்கள் உரிமை பாராட்டுதல் அந்தர்முக சிந்தனைத் தோற்றமென்னும் மனோதத்துவவிதி பற்றி சரியும் சகஜமு மேயாம். மேற்றிசைப்படிப்பையே, பெரிதுங் கொண்டாடும் இங்கிலீ[ஷ்] படித்த நம்மவர்கள் இப்புத்தகத்தை வாங்கி வாசித்தால் ஒருவாறு உண்மைபுணர அவர்களுக்கு இதுமிகவும் சாதனமாகவிருக்குமென்று நினைக்கிறோம். 25-ஸெண்ட் என்பது ஒருஷில்லிங் அல்லது 12-அணா. யாராவது 10-ப்பேர் சேர்ந்து 8 ரூபா அனுப்பினால் 10-ப்புஸ்தகங்கள் அமெரிக்காவிலிருந்து வரவழைத்துக் கொள்ளலாம் போலும்.

---

## Contemporary Opinion.

### H. E. The Governor on Religious Education.

### நமது கவர்னரும் மதக்கல்வியும்.

நமது கவர்னர் லார்ட் ஆம்தில் கோதாவரி இந்து சமாஜத்தார் சபை முன்பாக இந்துமதக்கல்வியைப் பற்றி நீண்டதோர் பிரசங்கஞ் செய்தாரென மிக்க அன்புடன் நம்மித்திரன்பத்திராதிபர் தம் பத்திரிகைப்பத்தியில் வரைந்து யாவரும் அறிந்தானந்தப் படும்படி விடுத்தது மெத்தவும் மெச்சத்தக்கதே. கவர்னர் இதுவிஷயத்தைப்பற்றிப்பேச இடம்நேர்ந்ததையும் அவர் தமது உள்ளத்துள்ள அபிப்பிராயமனைத்தையும் ஒருங்கே வெளியிட்டிருப்பதையும்

யோசிக்குங்கால், அவர் இந்துமதத்தார் தம் மதக்கல்வியை முழுதும் வெறுத்துப் புறமத நடை, உடை, பாவனை, ஆசார அனுஷ்டானங்களையே பெரிதாய்க் கைப்பிடித்து காலங்கழிக்கின்றதை நன்ருய்க் கண்டறிந்தே பேசியதாக வெட்டவெளியாகின்றது. ஆனல் அந்தப்பேச்சின் நடுவிலேயே கிறிஸ்துமதத்தைப்பற்றிப் பேசினவிஷயம் அவரை ஒட்டினமட்டில் சரியெனவே கூறலாம். ஏனெனில் அவர் அம்மதத்தில் ஜனித்து தம்மதக்கல்வியைக்கற்று தம்மதாசாரங்களையே, அனுஷ்டித்துவரும்போது தம் மதத்தில் அபிமானமிருப்பதும் அதைப்பற்றிப் பெரிதாகப் பேசுவதும் சகஜம்தானே. அவர் சொன்ன வண்ணம் ஆங்கிலேயர் வேறு பாஷைகள் கற்பதில்லையா? இதரமதக்கல்வி கற்பதில்லையா? உதாரணமாக ப்ரொபஸர் மாக்ஸ்-முல்லர் டாக்டர் டியூஸன் இன்னும் அநேகர் ஸமஸ்கிருதபாஷை கற்று இந்துமத ஆராய்ச்சி செய்யவில்லையா? மற்றும் அநேகர் ஸமஸ்கிருத புரொபஸர்களாய் ஆக்ஸ்பர்டு, கேம்பிரிட்ஜ்முதலான கலாசாலைகளில் ஆங்கிலேயரே இருக்கின்ருர்களல்லவா? இவர்கள் புறமதக் கல்வியைக் கற்றபோதிலும் தம்மதக் கல்வியையும் ஆசாரத்தையும் விடுத்தனரா? தவிர மிஸஸ் அனி பெஸண்டு, ஸிஸ்டர் நிவேதிதா, மிஸ் லிலியன் எட்கர், ஸ்வாமி அபயானந்தா முதலியபெண்மணிகள் இந்து மதக் கல்வியைக்கற்கவில்லையா? தவிர மிஸஸ் அனிபெஸண்டு இந்துமதத்தின் உண்மையை ஆராய்ந்தறிந்து அதனையே பரவச்செய்யும் எண்ணத்துடன் தேசங்கடோறும் சென்று நீண்ட பிரசங்கங்கள் செய்து ஆங்காங்கு இந்துமத சங்கங்கள் ஏற்படுத்தி யிருப்பதோடும் கோடிக்கணக்கான ரூபாய்களைச் சம்பாதித்து காசியில் இந்து கலாசாலை ஒன்று ஏற்படுத்தி அதனில் இந்துமதத்தைப்பற்றிய கல்வி யனைத்தையும் கற்றுக்கொடுத்து வருகிருர்களல்லவா? தவிர இந்து சாஸ்திரப்படி கல்விக்கு ஆதாரமாகிய சரஸ்வதி தேவியை பாடசாலை முன்பாக ஸ்தாபிக்கவேண்டி பாடசாலை வாயிலில் ஒரு சரஸ்வதி ஆலயமும் கட்ட ஆரம்பித்திருக்கிருர்களல்லவா? இம்மாதிரி அநேகர் புறமதக்கல்வியை செவ்வனே கற்றும் தம்மதத்தினிடத்துள்ள அபிமானத்தையும் ஆசாரத்தையும் கைவிடாது தம்மதத்தையே பெரிதாகப் பேசிவருபவர்களா யிருக்கின்ருர்களல்லவா? சர்வகலா சங்கப்படிப்பே மதக்கல்விக்கு விரோதமெனச் சொல்வது நம்மவர்க்கு முற்றும் சரியெனச்சொல்ல இடந்தராது. ஏனெனில் சர்வகலா சங்கப்படிப்பு கற்ருலன்றி நம்மாங்கிலேய துரைத்தனத்தார்கீழ் ஜீவித்திருப்பது சாத்தியமாகாது. ஆங்கிலபாஷைகற்று உயர்பதவி பட்டங்கள்பெற்று துரைத்தனக்கச்சேரிகளில் உத்தியோகத்தில் அமர்ந்தே பெரும்பான்மையோர் ஜீவிக்கின்றனர். தவிர எந்தவிஷயத்திற்கும் இக்காலத்தில் ஆங்கிலப்படிப்பே வேண்டியிருக்கின்றது. எந்தத் தொழிலாளிக்கும் கொஞ்சமாவது ஆங்கிலபாஷை தெரிந்திருந்தால்தான் அநுகூலமாக இருக்கின்றது. ஆங்கிலபாஷை கற்றதினலேயே நம்மதக்கல்வியையும் மத ஆசார அனுஷ்டானங்களையும் கற்காமலும் அனுஷ்டிக்காமலும் இருக்கவேண்டுமென்று ஏதாவது நிபந்தனைகளுண்டா? ஆதிமுதல் ஆங்கில துரைத்தனத்தார்கீழ உயர்பதவி உத்தியோகங்களைவகித்துவந்த ஸர் சேஷய்யசாஸ்திரி, ஸர் டி. முத்துசாமி அய்யர், ரங்காசார்லு, ஸர் மாதவராவ், புரொபஸர் ரங்கனாதமுதலியார் முதலானோர் ஆங்கிலம் கற்று B. A., M. A, முதலிய உயர்தரப்பட்டங்கள் பெற்றும் மதக்கல்வியையும் ஒருங்கே கற்று தம் மதத்தை விடாது பற்றி உத்தியோகம் செய்யவில்லையா? இப்பொழுதுள்ள புரொபஸர் ரங்காசாரியார், ஸர், S. சுப்பிரமணிய அய்யர், ஸர் பாஷ்யம் அய்யங்கார் இன்னும் ஆங்காங்குள்ள அநேகம் உயர்தர உத்தியோகங்களை வகித்துவரும் ஏனைய ஆங்கிலங்கற்ற உயர்தரப் பட்டங்கள் பெற்றவர்களும் தம்மதக்கல்வியையும் செவ்வனே கற்று முறை வழுவாது நடக்கின்ருர்களல்லவா? இப்பேர்ப்பட்ட பலபெரியமனிதர்கள் நம் கண்முன்பாகவே நம்மிந்து மதத்தின் விருத்தியைக் கருதியே எவ்வளவோபடாதபாடும் படுகின்றனர். இதனைத்தையும் விடுத்து இற்றைநாள் மாணவர்களுக்கு வித்தியாப்பியாசம் கற்றுக்கொடுக்க எண்ணும்போதே பிள்ளைகளின் பெற்ருேர்கள் தம் பிள்ளைகளுக்கு (முன்னேர்கள் வழக்கமாகிய "ஹரி ஓம் நமோ நாராயணுய சித்தம்" என்னும் இத்தியாதி முறையை விடுத்து) A. B. C. D. எனவே கற்பலகையிலும், அரிசியிலும் எழுதிக்காட்டி ஆங்கிலமே கற்றுக்கொடுக்கும்படியாய் உபாத்தியாயருக்குச் சொல்லி அதனையே கவனித்து வருகின்றனர். தவிர பிள்ளைகளும் தமக்குக்

கொஞ்சம் கூட்டிப் படிக்குபடியான சக்தி வந்து விட்டால் அதனிலேயே அதிகமான ஊக்கத்தையும் வைத்து இரண்டொருவகுப்பு மேலேறிவிட்டால் தகப்பனை "நான்ஸென்ஸ்" "ஓல்ட் மான்" "பூல்" என்னும் இத்தியாதி வார்த்தைகளை மட்டுமரியாதை யின்றிஉபயோகிக்கின்றனர். பிள்ளையினுல் பெருத்த கண்ணியத்தையும், பொருளையும் அடையலாமென் னும் எண்ணத்துடன் கூடிய தகப்பன்மார், இந்த மாதிரியான மரியாதைக் குறைவான வார்த்தை களைச்சொன்னுல், ஒகோ நம்குழந்தைக்கு இங் லீஷ் நன்ருக வந்துவிட்டது என்று சந்தோஷப்பட் டுக்கொண்டு இனி அதிகம் கற்றுக்கொண்டு விடு வான் என்ற எண்ணத்தால் சதா சர்வகாலமும் சகல ஆகாரங்களையும் கொடுத்து அதனையே நன்ருய்க் கற்றுக்கொள் எனச்சொல்லி உற்சாகப்படுத்துகின் றனர். இதனுல் பையனது நிக்குணம் மேலிடவும் படிப்பும் சேர்க்கையும் ஏற ஏற எண்ணம் முற்றிலும் மாறுபடுகின்றது. இப்படி இவன் மாணவனுயிருக் குங்காலத்தில் மதக்கல்வி சிறிதும் இல்லாமல் பாதிரி மார் பள்ளிக்கூடங்களில் ஏழையாயுள்ள இந்துக்கள் பொருளுதவியின்றி கஷ்டப்படுவதைக்கருதி அங்கு சென்று கல்வி கற்பதோடும் அவர்களால் கற்றுக் கொடுக்கப்படும் மதபோதனைகளையும் நயபயமான வார்த்தைகளையும் கேட்டு ஆனந்தித்து அவர்களது வலையில் சிக்கி மதாசாரங்களை முழுதும் துறந்து வாரிக்கட்ட கனக்கண்டு கொண்டிருந்த பெற்ருேர் வாயில் மண்ணைத் தெள்ளிப் போட்டுவிட்டு மதிமய ங்கிப் போய்விடுகின்றனர். இன்னும் சிலர் இந்து மத ஆசார அனுஷ்டானங்கள் முற்றும் வேஷம் என எண்ணி 'ஹாட்டும் பூட்டும்' (Hat and Boot) போட்டுக்கொண்டு 'ரிப்ரெஷ்மெண்டு ரூம்களில்' காப்பியும் டீயும் நின்ற நிலையில் குடித்துக்கொண்டும் சிலர் ஒயினும் ஜின்னும் குடித்துக்கொண்டும் தீக்ஷ தர், சாஸ்திரி, ஜடாவல்லபர், ஐயர், அய்யங்கார் என் னும் குலப்பேரையும் விடுத்து அகம்பாவிகளாய் திரி கின்றனர். இம்மாதிரியாய் பெற்ருேர்களது மதி யீனத்தால் சகல அனர்த்தமும் மதக்கல்விக்குலைவும் நேருகின்றதே தவிர சர்வகலாசங்கப்படிப்பினுல் நேருகின்றதெனச்சொல்ல இடமில்லை. சிறுவய திலேயே சர்வகலாசங்கப் படிப்போடு கூட மதக்கல் வியும் ஒருங்கே கற்றுக் கொடுத்துக்கொண்டுவந்தால் நம் இளம்பிள்ளைகள் ஏன் தம்மதத்தையும் ஆசாரத் தையும் விடுத்து புறமதங்களைத் தழுவி பிரஷ்டர் களாய்ப்போகின்றனர். இதனை உணராமல் ஆசை மேலீட்டால் தம்பிள்ளைகள் ஆங்கிலமே கற்று உத்தி யோகம்செய்து மெத்தப் பொருள் சம்பாதித்து கண் ணியமாய் இருக்க எண்ணி ஆசாரத்தோடு இருப் பாரையும் பார்த்து பரிகாசம் செய்தும் இகழ்ந்தும் பேசித்திரியும் நம் பெற்ருேர்களே காரணமாயிருக்க, சர்வகலாசங்கப்படிப்பும், புறமதக்கல்வியும் காரண மெனச்சொல்லச் சிறிதும் இடமில்லை யெனவே கூறலாம். ஆனது பற்றி இனிமேலாவது நம்மிந்து மதத்தி லுற்பவித்த ஒவ்வொருவனும் ஆங்கிலம் கற்பதோடு ஒருங்கே தத்தம் மதக்கல்வியையும் கற்று நிபுணர்களாயிருந்து அந்த மதத்தைவிட்டுப் புறமதம் போகாமல் மதத்தி லபிமானம் வைத்து வாழ்வார்களென நம்புகிருேம்.

சு—மி.

---

## சுகுண சுந்தரம்.

---

XII

அப்பூஞ்சோலையில் வழக்கப்படி நீராடுந் தடாகத் தில் சுலோசனை சம்பகாவதியுடன் நீராடி, அவ்விடத் திலுள்ள மண்டபத்தில் தேவியைப்பார்த்துக் கன் னியாமாடம் நோக்கித் திரும்பி வருங்கால், ஒருவன் அதிவேகமாய் வருவதைக்கண்டாள். கண்டதும் அவ ள், அவன் வருமாதிரியைக் குறிப்பினுலுணர்ந்து, தன் பிதாவினிடமிருந்து ஏதோவிபரீதசமாசாரங்கொண் டுவருவதாய்த் தீர்மானித்துப் பதை பதைத்தனள். தான்கண்ட துற்கனவையும், சம்பகத்தின் வலதுகண் துடித்ததையுமெண்ணி யெண்ணி இனி நிகழ்வதெ ன்னையோ வெனப் பதறினள். அப்பொழுது, சம்ப காவதி, "அடி, சுலோசனே ! கௌரி பூஜைக்கு நாமிருவரும் வரும்போதே நமக்குற்ற துற்குறிகளை நாமறிந்து மனகொந்தாலும், இதோ நம்மை நோக்கி வரும் மானிடரைப் பார்த்ததும் நீ மனம் வலியற்றுக் காணுகின்றனே; அவர் யாவர் ? அடி ! நம்மை எத்து யாணுகினும் மனவலியை நாம் கைவிட லாகுமோ ? அஃது நீயறியாததோ ?" என, சுலோசனை, "அடி, பிராணசகி ! நம்மை நோக்கி வருபவர் சுமுகர், தோ ழிகனகத்தின் கொழுநர், அமைச்சராம் மதிவிலாஸ

ருக்கடுத்தவர், என் பிதாவின் அந்தரங்கநேசர்; என்னைத்தேடி அழைத்துவா என் பிதா அனுப்பியதாயெண்ணுகிறேன்." என்றாள்.

**சம்பகாவதி:**—"அடி, பிராணசகி! ஸ்வயம்வரக்காலம் கிட்டியதென்று அழைக்கவருகின்றார்போலு" மென், அவள், "அங்ஙனமாயின் உனக்கு மங்களமுண்டாகக் கடவது. அவர் முகவாட்டத்துடன் தள்ளாடித் தள்ளாடி நம்மை நோக்கிவரக்காரணமில்லை: ஏதோ பார்ப்போம், பராசக்தியின் அருள் யாதோ? அதன்படி எல்லாம் நடக்கும்;" என்று சொல்லிக்கொண்டிருக்கையிலேயே சுமுகர், இராஜகன்னிகைகள் பக்கலணுகி, தான் வந்த காரியத்தைச் சடுதியில் சொல்ல வாயெழாமல், குழரிப்பதறி, மனம் வருந்திக் கண்ணீர் பெருக்கத் தலைப்பட்டனர். அச்சமயத்தில் சுலோசனை திடுக்கிட்டு ஒன்றுந் தோன்றாதவளாய் நின்றாள். சம்பகாவதியோ, மனதைக் கொஞ்சந் தேற்றிக்கொண்டு சுமுகரை நோக்கி, "ஐயா! என்ன விசேஷம்? நீவிரிங்குற்ற காரணம் யாது? ஏன் எங்களைக்கண்டு கண்ணீர் பெருக்குதல் வேண்டும்? நாங்கள் பண்ணின நிர்ப்பாக்கியந்தான் என்னே? நிகழ்ந்தனவற்றை ஒளியாமற் சொல்லி யருள்வீர்." என்று வேண்டினவளாயினள். உடனே சுலோசனை, "சுமுகரே! என் கண்ணாளாம் சுந்தரராஜனும், அவர் நேசராம் சுகுண சீலரும் குசலமோ?" என்று மாத்திரங் கேட்டனள். சுமுகர் சுலோசனைக்கு விடையளிக்க மனந்துணியாமல், கடைசியில், "பாவைகாள்! சுகுண சுந்தரர்கள் இவ்வுலகவின்பங்களைத்துறந்து சென்றனராயினர்;" என்று நா தழதழத்துச் சொல்லினர். உடனே அப்பெண்மணிக ளிருவரும், "ஹே, நாத! நாங்கள் கண்ட துற்குறியின் பல னிதுதானோ!" என்று சோகமுற்றுக் கீழே விழுந்தனர்.

சுமுகனுக்கு இந்த இராஜ குமாரிகளைத்தேற்றி அரண்மனைக்கிட்டுப்போவது அசாத்தியமாயிற்று.

பிறகு சுலோசனையும், சம்பகாவதியும் சோகந்தெளிந்து, தரையில் விழுந்து புரண்டும், தலையில் தத்தங் கரங்களினால் அடித்துக் கொண்டும், அங்குள்ள மரங்களில் முட்டிக் கொண்டும், "ஹே, நாத! ஹே, சுகுணசீல! ஹே, சுந்தரானந்த! அபலையான என்னைப் பிரிந்தேகுதல் நீதியோ?" என்று இருவரும் ஏக காலத்தில் தனித்தனியே சொல்லிக் கதறத் தலைப்பட்டனர்.

**சுலோசனை:**—"ஹே, சுந்தரரூப! ஈசுவரியின் கிருபையினால் உம்மை நாயகனாக அடையப் பெற்றேனென் றிறுமாந்திருந்தேனே! ஐயோ! இதே உபவனத்தில் நான் சாகசஞ் செய்யத் துணிந்த காலத்திலேயே என் உயிரைப்போக்கி யிருந்தால், இத்துன்பம் என்னை யணுகாதே! 'சுலோசனே! என்ன சாகசஞ் செய்யத் துணிந்தனை; உன்னை யாள யானிப்பூவுலகினிருக்கையில்; சுகுணா! இவள் கழுத்திலணிந் திருக்கும் கொடியை உன்வாளினாலறுத்தெறி சீக்கிரம்' என்ற தீரமொழியைக் கேட்டு, அம்பாள் அனுக்கிரகப்படிக்குள்ள பர்த்தா நீரே என்று எந்த நிமிஷத்தில் என் மனதில் தீர்மானித்தேனோ, அதுமுதல் விதுவரையில் உம்மைப் பயிரங்கமாய் மாலையிடுங்காலம் எக்காலமோ என் றெதிர்பார்த்திருக்கும் என்னை தெய்வம் சோதிக்கலாச்சுதே! இப்போது நான் செய்யப்போகுஞ் சாகசத்தைத் தடுப்பவர் யாவரோ? பிராணேச! "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்னும் வசனம் பொய்க்கலாச்சுதே! சுகுண சுந்தரர்களென்றால் உலகமே நடுங்குகின்றதே! இப்பூவுலகில் திக்விஜயஞ் செய்தது போதாதென்று வானுலகஞ் சென்று உங்களிருவருடைய பராக்கிரமத்தை வானவர்கட்குக் காட்ட வெண்ணிச் சென்றீர்களோ? ஒருவரைவிட் டொருவர்பிரிந்து செல்வது தோழமைக் கழகல்ல வென்று இருவருஞ் சேர்ந்து இவ்வுலக வாழ்க்கையைத் துறந்தீர்களோ? ஐயோ! சுகுண! 'ஈசுவரகிருபையால் நிகழ்ந்த இந்த திருக்கல்யாணத்திற்கு எதுவு மீடாகாது, தம்பதிகள் இருவரும் தத்தம் மாலைகளை இச்சபை வேளையிலேயே ஒருவருக்கொருவர் மாற்றிக்கொள்ள வேண்டுகின்றேன்' என்ற உன்வார்த்தையைக் கேட்டு, உலகம் பழிக்குமென்று நான் ஆக்ஷேபித்த தற்குத் தக்கவிடையளித்தனையே; அந்த உன் சுந்தரமான மொழிக்குடன்பட்டன்றோ, உலகப் பழிப்புக்கு மஞ்சாது, தந்தையர்களுடன்பாட்டின் பேரில்,

நிகழப்போகும் விவாகத்தில் பயிரங்கமாய் என் பிராண காந்தனை மாலையிட எண்ணினும், அக்காலத்தில் உன் தோழனை சுந்தர வள்ளலை மாலையிட்டேன்; அப்பொழுது வானவர்களுமல்லவோ பூமாரி பொழிந்தனர்? அஃது பொய்க்கலாகுமோ? இவ்வாறு மோசம் வருமென்று தெரிந்தால்சாவித்திரிதேவியானவள், தன்கொழுநனுடைய ஆன்மாவையபகரித்துச் சென்றதென்றிசைக்கோனுடன் கூடச்சென்றுவாதாடி,மாங்கல்ய பிட்சை வாங்கிச் சவமாய்ப்போன கொழுநனை மறுபடியும் உயிர்ப்பித்தமாதிரி, ஹே, சுந்தராங்கனே! உம்மைப்பிரியாமலிருந்து நானும் பாதுகாக்க மாட்டுவனே! ஹே, பிராண காந்த! உங்களிருவருடைய தோழமையை என்னென்று சொல்லுவேன்! பொற்சுருளில் வரையப்பட்டிருந்தனவற்றை ஈசுவரான்ஞை என்று சிரசால்வகித்து மித்திரகாரியத்தைச் சாதிக்கவன்றோ, புதுமணவாட்டியாமென்னைப் பிரியலாயிற்று; உலகோபகாரமாய் துஷ்ட இராக்கதர்களைக் கொன்றாலும், இச்சுந்தரவதியான சண்பகத்தையும் இக்கொடுந்துன்பத்திற்காளாக்கினீர். நாத! இதோ உபவனத்தில் என்னைப்பிரிந்து செல்லுங்கால், அவ்வளவு வன்னெஞ்சமுடையவனல்லேன் என்று சொன்ன மொழிதவறுகின்றதே! அந்த நிமிஷமுதல் இந்த நிமிஷம் வரையில், உம்மைக் கண்ணாரக்கூடப் பார்ப்பதற்கில்லாமற்போய்விட்டதே; என் பிராணேசா! என்னைத்தனியே இவண் தவிக்கவிட்டு வானவருலகு செல்ல லழகாகுமோ? நான் உம்முடைய பிராணசகியல்லவோ? ஹே, பராசக்தி! உன்னை நான் தினம் பூசித்ததின் பலன் இது தானோ? ஐயோ, நான்நாதனற்றவளாயினேனே! என்செய்வேன்!" என்று பிரலாபித்தனள்.

சம்பகாவதியோ துர்முகனை லபகரிக்கப்பட்டு, அத்துன்பத்தினின்றும் ஈசுவரியின் அனுக்ரக விசேஷத்தினுல் நேற்று சாயாகை சுகுணசுந்தரர்களால் விடுபட்டுவந்தவளான படியால், வருவதுவந்தேயாகுமென்று மனவன்மை கொண்டிருந்தாலும், சுலோசனையின் கதறலைக்கேட்டு மனநொந்து தானும் புலம்புவளாயினள்.

சண்பகாவதி:—"ஐயோ,நான் கீழே நேற்றுவரையில் பட்ட அவதிகள் போதாவா? இன்னும் என்ன என்னதுன்பங்கள் சம்பவிக்க இருக்கின்றனவோ! பிலத்தில் காட்டின பராக்கிரமத்தைக் கண்டு மனம் பூரித்ததே! ஜயப்பிரதாபர்களான நீங்கள் உயிரிழக்கக்காரணமென்னையோ? ஹே, நாத! பிராணகாந்த! சுகுணசீல! உன்னை எங்கு காண்பேனோ? நீங்களிருவருஞ்சேர்ந்து எத்தகைய காரியத்தையும் முடிக்கும் தீரர்களன்றோ? இளஞ்சிங்கங்களுக் கொப்பான சுகுணசுந்தரர்கள், குஞ்சரங்களுக் கொப்பான, இராக்கத கூட்டங்களை யெல்லாம் க்ஷணிகநேரத்தில் த்வம்சஞ்செய்துகர்ஜித்ததைக்கண்டு மனம்பூரித்து இறுமாந்தேன். அடி, சுலோசனே! அவர்களென் கண்களுக் கெதிரில் நிற்கிறாப்போல் தோற்றுகிறார்களே!"—

"ஐயோ, சுகுண! நேற்று உன்னை தரிசித்தது முதல் உன்னைஸ்பரிசிப்பது எந்நாளோ எந்நாளோ எந்நாளோ என்று ஏங்கி வருந்தா நிற்கின்றேனே! நேற்றிரவில், அடி, என்கண்மணி சுலோசனே! உனக்கு இவ்வுபவனத்தில் நிகழ்ந்த அற்புத லீலாவினோதமும், தெய்வசம்மதமுமான திருமணத்தைப்பற்றி, சுந்தரராஜன் அழகாய்ச் சொல்லிமுடித்ததைக் கேட்டு நான்கொண்ட சந்தோஷமெல்லாம் அதிசீக்கிரத்தில் துக்கமாக மாறி மனம் வருந்தச் செய்ததே! அடி! நம்முடைய தீனமான இக்கூக்குரலைக் கேட்டு தேவி யருள்புரியாளோ? ஹே, ஜகதம்பிகே! உன்மனமும் கல்லோ? உன்னுடைய அருள்பூர்ணமாயிருக்கிறதென்று நம்பினேனே! இக்கொடுங்கேட்டை நாங்கள் சகிக்கவல்லேம் அல்லேம்; நாதனற்றவர்களாய் இவ்வுலகில் இனி அரைக்ஷணம் இருக்க வசமோ; அடி, நம் கொழுநருக்குற்ற துன்பந்தானென்னையோ வென்றுசுமுகரைக் கேட்டறிந்து கொள்வோம், ஒன்றுந்தெரியாதவர்கள் போல் நாமுமிப்படி புலம்பலாகாது. அடி, காந்தாமணி! கொஞ்சம் உன் மனதைத்தேற்றிக்கொள். நிகழ்ந்தன வராற்றை உள்ளபடி யறிந்து, அதற்குப் பரிகாரத்தைத் தேடுவோம் கீழே நிகழ்ந்தனவற்றைப் பரியாலோசிக்குங்கால், பராசக்தி நமக்கு கிருபை புரிவாள் என்பதில் ஐயமில்லை." என்றுபலவித சமாதான மொழிகள் பகர்ந்து தானும் மனந்தேறி சுலோசனையையும் தேற்றினள்.

(இன்னும் வரும்.)

## OBITUARY.

## மரணங்கள்.

1. Herbert Spencer.—இங்கிலாந்தில் சென்ற நூற்றாண்டில் அதிமேலான மதியூகியாகவும் தத்துவ சாஸ்திர விற்பன்னராகவும் விளங்கிய மிஸ்டர் ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் சென்றமாசம் அவருடைய 83-வது வயதில் காலஞ்சென்றதைக் குறிப்பிட விசனிக்கிறோம். இவர் மனோதத்துவசாஸ்திரங்களில் மிகவல்லவராய், மனோதத்துவங்களை யாராய்ந்து உண்மையான மூலக்கொள்கைகள் (First Principles) என்னும் பேர்கொண்டு நன்றாக விளக்கிக் காட்டியுள்ளார். ஆங்கிலேய மதியூகிகளில் அத்வைதசித்தாந்தத்துக்குக் கிட்டத்தட்ட வந்த பிரபல தத்துவ சாஸ்திரி இவர் ஒருவரேயென்று சொல்லலாம். அங்கிலேயர்களுக்குள் மதியூகத்தில் முதன்மைபெற்று விளங்கியவர் இவர் என்பதிற் சந்தேகமில்லை. இவர் தத்துவ சாஸ்திரத்தில் ஆராய்ச்சிசெய்து எழுதிய புஸ்தகங்கள் அனேகம். அவையெல்லாம் சென்ற நூற்றாண்டில் முதன்மைபெற்று விளங்கினவாயினும் அவற்றில் பெரும்பான்மை இந்த நூற்றாண்டு செல்லச்செல்லப் பழமைப்பட்டுக் கழிவனவாமென்று நினைக்கத் தக்கதாயிருக்கிறது. இந்த மீ-14உ இவருடைய பிரேதம், இவர் விருப்பத்தின்படி தகனஸம்ஸ்காரம்செய்து நீறாக்கப்பட்டது. அப்பொழுது வழக்கமாய்ச்செய்யும் பிரசங்கம் லியனார்ட் கோர்ட்னி யவர்களால் செய்யப்பட்டது. அச்சமயம் அங்கிருந்த இந்தியரொருவர் இவருடைய ஞாபகசின்னார்த்தம் ஆக்ஸ்போர்டில் ஒரு தத்துவப்பிரசங்க ஏற்பாடு செய்ய 1000 பவுன் அளிப்பதாகச்சொன்னார்.

2. திவான் பஹதூர் எஸ். ஸ்ரீனிவாஸராகவையங்காரவர்கள் ஸி. ஐ. இ.—இவர் நாளது டிசெம்பர்மீ 11உயன்று காலகதி யடைந்தார். தற்காலத்து இந்தியர்களில் கல்வியிலும் வித்தையிலும் மதியூகத்திலும், இராஜகாரிய நிர்வாகத்திலும், இராஜ்ஜிய க்ஷேம விசாரணையிலும் இவர் நிகரற்று விளங்கியர். தஞ்சையில் படித்து உபாத்தியாயராயிருந்து பிறகு கலெக்டராபீஸில் வேலையாக அமர்ந்து அவருடைய சாமர்த்தியத்தினால் கலெக்டராயிருந்த மிஸ்டர் ஜி. எச். ஸ்டோக்ஸ் துரையின் அபிமானத்தையும் ஆதரவையும் பெற்று ரெவினியூ போர்டாபீஸிற்கு வேலையாகவந்து அங்கிருந்து செக்ரிடேரியட் ஆபீஸுக்கு மாற்றப்பட்டுச் சென்றார். அங்கேயவர் காட்டிய வேலைத்திறத்துக் குளமகிழ்ந்து கவர்ன்மெண்டார் இவரை மிஸ்டர் ஹாம்னெட்டுக்குப்பின் ரிஜிஸ்திரேஷன் இலாகாத் தலைவராக நியமித்தார்கள். அவ்வேலை வகித்துவருகையில் இந்தியர்களின் யோக க்ஷேம நிலையுணர தேசவளம் குடிவளத்தின் உண்மை நிலைமையை உள்ளபடி யறிய முயற்சி செய்ததையுணர்ந்து லார்ட் கன்னிமாரா கவர்னராயிருந்தகாலத்தில் பிரிடிஷ் ஆளுகையின்கீழ் சென்ற 40-வருஷங்களில் சென்னை இராஜதானி யடைந்த விர்த்தியைப்பற்றி விசாரித்து ரிபோர்ட்டு செய்யக் கேட்டுக்கொள்ளப்பட்டார். அவ்வேலையை அவர் வெகு நன்றாகச்செய்து முடித்து எழுதிய புஸ்தகம் எல்லாராலும் கொண்டாடப்படத்தக்க திறமை வாய்ந்ததாகவிருந்தது. இப்புஸ்தகத்தினால் அவருடையபேரும் கீர்த்தியும் இந்தியாவில்மட்டுமன்றி இங்கிலாந்திலும் பரவலாயிற்று. பிறகு பரோடா மஹாராஜா இவரைத் தம் இராஜ்யத்திற்கு திவானாக நியமித்தார். அங்கு போகுமுன்னும் பின்னும் விவசாயபாங்கி விஷயமாய் மிஸ்டர் நிக்கல்ஸன் செய்து வந்த விசாரணையில் மிகசிரத்தை பூண்டவராய் பயிரிடுங்குடிகளின் நிலைமையைப்பற்றி மிகவூன்றி விசாரித்துவந்தார். இது விஷயமாய் விவேகசிந்தாமணியில் வெளியான தொடர்பிடியான விஷயங்கள் இவருடைய உதவிகொண்டும் ஒத்தாசைகொண்டுமே எழுதப்பட்டுவந்தன. அவைகளையெல்லாம் அதிக பொறுமையோடும் சிரத்தையோடும் 'புரூப்' காபியிலே பார்வையிட்டுத் தம்மபிப்பிராயத்தைச் சொல்லியதன்றி நெடுநேரம் அவ்விஷயங்களைப்பற்றிப் பேசி மிகவும் சிலாக்கியமான எண்ணங்களுதிக்க அதியுக்தியோடு ஆலோசனை சொல்லித் தேற்றிவந்தார். பரோடாவிலிருந்து வந்தபின் யூனிவர்ஸிடி கான்வோகேஷன் சபையில் பிரசங்கம் செய்யா நியமிக்கப்பட்ட பொழுதும், ஹிந்து ஹைஸ்கூல் வருஷோற்சவகாலத்தில் அக்கிராசனாதிபதியாகவிருந்து பேசியகாலத்தும் இப்பொழுதுள்ள வித்யாமுறையில் 'மதக்கல்வி' யில்லாத குறையை நிவர்த்திக்க வேண்டியதின் அவசியத்தைப்பற்றி வற்

புகழ்த்திக் கூறியப் பிரசங்கித்தார். எல்லா ஹிந்து பாடசாலைகளிலும் பகவத்கீதைபோன்ற எல்லாருக்கும் பொதுவான மதகிரந்த மொன்றை யாதாரவாகக் கொண்டு மதபோதனை செய்வது அசாத்தியமான காரியமல்லவென்று சொன்னார். 1902-ம் வருஷம் இதுவிஷயமாய் இவரோடு கலந்துபேச நேரிட்டதில் இதன் அவசியத்தைப் பற்றி இவர் ஆழ்ந்த அபிப்பிராயங்கொண்டவராயிருந்தது தெரியவந்தது, இவரைத்திருவாங்கூருக்கு தீவானாக நியமிக்கக் கருதி யிருந்தார்கள். அதற்குள் அகாலமரணமாகப்போய்விட்டார். இவரை யிழந்ததில் இந்தியாவிற்குண்டானகுறை யெளிதில் நிவர்த்திக்கத்தக்கதாயில்லை. இவருடைய பெருமையையும் திறமையையும் குறித்து லார்ட் அம்தில் அவர்களும், ஸர் அண்ட்ரு ப்ரேஸர் அவர்களும் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்து இவர் மரணத்துக்குத் துக்கித்து இவருடைய ஜேஷ்ட குமாரருக்குக் கடிதமெழுதியிருக்கிறார்கள். இவர் போலீஸ் கமிஷனுக்கு மெம்பராய் நியமிக்கப் பட்டபொழுது இவருக்கு நேர்ந்த அசௌக்கியம் முத்தி உயிருக்கு ஆபத்துவிளைத்ததாகத்தெரிகிறது. இவர் காலஞ்சென்றதைப்பற்றி நாம் உண்மையாகவே மிகவும் துக்கித்து வருந்துகிறோம். இவர் குடும்பத்தாருக்கு நேரிட்ட நஷ்டத்துக்கும் இவ்விராஜதானிக்கே நேரிட்ட நஷ்டத்துக்கும் மிகவருந்துகிறோம்.

3. இராமநாதபுரம் இராஜா பாஸ்கர சேதுபதி மஹாராஜா அவர்கள்.—இவர் தம் 35-வது பிராயத்தில் திருநெல்வேலிக்குப் போயிருந்தபோது ஏதோ சத்திர சிகிச்சை செய்யநேரிட்டு அதனால் கள்ளிடைக்குறிச்சியில் திடீரென்று மாண்டதாகக்கேட்டு ஆறாத் துயரத்திலாழ்ந்தினோம். இவர் தம் சமஸ்தானகாரியங்களைப் பார்ப்பதில் எவ்வளவோ ஊழலாகவிருந்தாலும், உண்மையில் தங்கமான மனிதர். நல்ல சிந்தையும், தூயஹிருதயமும், பகவத் பக்தியும், ஆத்மசிந்தனையும் அனுதாபநிறைவும் பொருந்தியவர். கல்வியிலும், விசேஷமாய்த் தமிழிலும் மிகத்தேர்ந்தவர். இவருடைய மேலான சற்குணங்களே, உலகவிஷயங்களில் இவருடைய பிரயத்தனங்கள் உள்ளபடி நிற்க்காமற் போனதற்குக்காரணமாயிருந்ததாகச் சொல்லலாம். இவருடைய தர்மசிந்தையே அதர்மமலிந்த இக்காலத்தில் இவரை யுலகத்திற் கேற்றவராகவின்றிச் செய்ததுபோலும். இந்த உள்மர்மத்தை யுணர்ந்தே யிவர் தம் மதிகாரத்தையும் இகலோக வியாபாரங்களையும் பிறரிடம் ஒப்புவித்துவிட்டுத் தாம் மனதை தெய்வ சிந்தனையிலும், க்ஷேத்திரயாத்திரையிலும் செலுத்திவந்தார். இகத்திலுள்ள குறை யென்னவாயினும் பரத்திற்கு இவர் எப்போதும் பாத்திரராகவே இருந்தார். இவர் அகால மரணத்தைக்குறித்து நாம் மிகவும் மனம் வருந்திச் சிந்திக்கலானோம். பரமேசுவரன் இவர் ஆத்மாவைத் தம் பாதாரவிந்தத்தில் சேர்த்து ஐக்கியமாக்கிக் கொள்வாரென ஹிருதய பூர்வகமாசச் சிந்தித் துப் பிரார்த்திக்கிறோம். சிவோஹம்.

---

## THE STRESS AND STORM OF THE LAST WEEK IN MADRAS.

## சென்னையிற் கூடிய மஹாசபைகளும் மழை காற்று வெள்ளமும்.

இந்த டிசம்பர்மாசம் கடைசிவாரத்தில் சென்னையிற் கூடிய மஹாசபைகள் அனந்தம். இவ்விராஜதானியினின்றும் இந்தியாவின் மற்றெல்லாப்பாகங்களினின்றும் மஹாஜனங்கள் சென்னைக்கு ஏராளமாக வந்திருந்தார்கள். காங்ரெஸ் மஹாசபைக் கூட்டம் ஒரு பக்கம், பொருட்காக்ஷி வைபவம் ஒரு பக்கம்; ஆசாரச் சீர்த்திருத்த சபையார் கூட்டங்கள் ஒருபக்கம்; அதற்கு மாறாகவுள்ள ஹிந்துமதப் பற்றுள்ள சீர்திருத்தக்காரர்கள் கூட்டம் ஒருபக்கம்; தியசாபிகல் சங்கத்தார் கூட்டம் ஒருபக்கம்: இப்படியாக எங்குபார்த்தாலும் மஹா சபைகளும் கூட்டமும் பிரசங்கமாரியும் மிகுதியாகவிருந்தது. இதில் மழை மாரியும் சேர்ந்துகொண்டது. 29-வ முதல் நாலு தினங்களாக மழையும் காற்றும் பலமாயிருந்ததில், கூவமாறும் அடையாறும் பெருகி வெள்ளம் கரைபுரண்டு சென்னையில் அனேக இடங்களை நாசம் செய்துவிட்டன. தெருக்களிலெல்லாம் கணுக்கால் முழங்கால் முதல் மாரளவு ஜலம் ஓடிக்கொண்டிருந்தது. ரோட்டுகளையெல்லாம் பாழாக்கிவிட்டது டிராம்வண்டிகளும் இரண்டு மூன்று நாள்களாக

நின்றுபோக நேரிட்டன. பறைச்சேரிகளனேகம் முழுகிப்பாழாய்ப்போயின். மழை காற்றினலும் வெள்ளத்தினலு முண்டான சேதம் அபரிமிதம்.

தென்னிந்தியா ரயில்வேயில் விழுப்புரத்துக்கு அப்பாலும் இப்பாலும் அனேகம் இடங்களில் வெள்ளப்பெருக்கினல் இருப்புப்பாதை அடியோடு சேதமாய்விட்டது. பெண்ணாற்று வெள்ளத்தால் சுமார் 5. மைல் தூரத்துக்கு இருப்புப்பாதை யடியோடு போய்விட்டது. அரக்கோணம் கிளைப்பாதையிலும் மற்றகிளைவழிகளிலும் அனேக இடங்களில் சேதங்கள் நேர்ந்திருக்கின்றன. சென்னை வடகிழக்கு இருப்புப்பாதையிலும் வெள்ளத்தால் சேதம் நேர்ந்து போக்குவரத்துத் தடைப்பட்டிருக்கிறது. தென்னிந்தியா ரயில்வே செப்பனிட்டாவதற்கு ஒருமாதம் செல்லுமாம்.

---

## SOME SOCIAL PROBLEMS.

### Local Endeavours and Activities.

## ஆசாரச் சீர்திருத்தம்.

---

### சென்னையிலுண்டான ஊக்கமும் முயற்சியும்.

இது விஷயமாக வருஷா வருஷம் காங்ரெஸுக்குப்பின் கூடிவரும் மஹாசபை இம்முறை சென்னையில் 31-உ யன்று 17-வது முறை கூடியது. அதற்கு முதனுள் சென்னை ஹிந்து ஜனசாரச் சீர்திருத்த சபையாரின் வருஷாந்தக் கூட்டம் கூடியது. அப்பொழுது மைசூர் ஸீனியர் கௌன்ஸிலர் ம-ா-ா-ஸ்ரீ வி. பி. மாதவராயர் அவர்கள் அக்கிராசனுதிபதியாக வீற்றிருக்க, கனம். மிஸ்டர் ஜஸ்டிஸ் சந்தாவர்க்கர் அவர்கள் ஓர் பிரசங்கம் செய்தார். அதில் ஜனசாரச் சீர்திருத்தம் சென்ற வருஷத்தில் விர்த்தியடைந்து வந்த விர்த்தாந்தத்தைச் சொல்லி மேற்கத்தியார் நாகரிகம்பற்றி நவீன சீர்திருத்தம் செய்யமுயலும் சீர்திருத்தக்காரர்களை, அது சரியல்லவென்று ஹிந்துமதப்பற்றைக் கைவிடாமலே ஜனசார சீர்திருத்தம் செய்யவேண்டுமென்று சொன்னவர்கள் நியாயத்தைக் கண்டித்து தாங்கள் போகும்வழியே சரியான வழியென்று சாதித்தார். இங்கு ஒரு விஷயம் விபரமாயெடுத்துச் சொல்லத்தக்கது. இப்பொழுதுள்ள ஜனசாரச் சீர்திருத்த சபைகளும் அவற்றிலிருந்துண்டான வருஷாந்த மஹாசபையும் ஹிந்துஸ்திரீபுனர்விவாக நிமித்தியமாயேற்பட்டுள்ள சபைகளின் முயற்சியிலிருந்துண்டாயின. இப்பொழுது இந்தப் புனர்விவாக சீர்திருத்த விஷயமாய் ஏற்கனவேயுள்ள வித்தியாசம் பலப்பட்டு வெளிவந்திருக்கிறது. பாலவிதந்துக்கள் புனர்விவாகம்செய்து கொள்ளவிரும்பின் அப்படியே அவர்களுக்கிடங்கொடுக்க வேண்டியதினவசியத்தைப்பற்றியாரும் ஆக்ஷேபிக்கவில்லை. ஆனல் இந்த விஷயம் ஆத்ம விவாஹமாகிய ஹிந்து விவாகக் கொள்கையைப் பாதிப்பதாயிருக்கிறது. எல்லா விவாகங்களிலும் ஆத்ம விவாஹமே மிகமேலானது: இகபரசுகமிரண்டிற்கும் ஆஸ்பதமானதும் சாதகமளிப்பதுமாயிருக்கிறது. இந்த உண்மையான உத்தமக்கொள்கை ஹிந்துக்கள் மனதில் நன்ருக வேரூன்றிக்கிடக்கிறது. இதற்குச் சரியாக அவர்கள் நடக்கிறதில்லையென்ற காரணத்தால் அந்த உத்தமக் கொள்கையை மாற்றுதல் சரியன்றென்பது எதிர்க்கக்ஷியார் சித்தாந்தம். ஜனசாரத்திற்கும், மதத்திற்கும் சம்பந்தமில்லை: சாஸ்திராதாரம்பற்றி எங்கள் வழிக்கு வந்தவர் வரட்டும்; சௌகரியவழிபட்டு வந்தவர்கள் வரட்டும்; பாலவிதந்துக்கள் இருக்கிறவரையில் புனர்விவாகம் இருந்தேதீரவேண்டியது என்பது சீர்திருத்தக்கக்ஷியார் சித்தாந்தம். மதப்பற்றின்றிச் செய்யும் சீர்திருத்தம் எதுவும் நிலைக்காதென்று எதிர்க்கக்ஷியார்சொல்ல, உங்கள் மதாசாரங்களை யனுசரிப்பதால் மனுஷனுக்கு பெந்தமேயன்றி மோக்ஷமுண்டாவதில்லையென்று சாதிக்கிருர்கள் சீர்திருத்தக்காரர். இவர்களுக்குள்ளிருக்கும் வித்யாசத்தையெடுத்துச்சொல்லவும் கிரகிக்கவும் ஆழ்ந்த சிந்தையும் ஆத்மபுத்தியும் அபார அனுபவமும் வேண்டும். சீர்திருத்தக்காரர்கள் முயற்சி மெச்சத்தக்கதாயினும் அவர்கள் எல்லா விர்த்திக்கும் ஆதாரமாயுள்ள பரிணமவிதியின் மூலக்கொள்கையைத்தள்ளி, ஜனசாரத்துக்கும் பிரதி ஜன நடத்தைக்கும் மனுஷன் புத்திக்கேற்ற நியாய அங்கிகாரம் இருக்கவேண்டுமென்று சொல்லி (Reason) பகுத்தறிவையே முடிவான சித்தாந்தஸ்தானிகராகச் செய்யப்பார்ப்பது உண்மைக்கும் ஆத்மதத்துவத்துக்கும் ஒவ்வாத்தாக விருக்கிறது. (Reason) பகுத்தறிவு எப்போதும் பிரத்யேகக்ஷேமத்தை நாடும் ஸ்வ

பாவமானது. ஜனசாரமோ மேலறிவின் ஆதரவு கொண்டு ஏற்பட்டது. பிரத்யேகக்ஷேமமும் ஜன சமூகவிர்த்தியும் பொருந்தவேண்டுமென்பது ஒரு சாரார் சாதிக்கும் சித்தாந்தம். ஆனால் இது உண்மையில் உள்ளபடியில்லை. பொதுக்ஷேமம் எப்போதும் பிரத்தியேக க்ஷேமத்துக்கு விரோதமாக விருக்கிறதேயன்றி அனுகுணமாயிருப்பதில்லை. பொதுநயம் பாராட்டும் சிலர் சுயநயம் பாராட்டுவதில்லை. "அன்புடையார் என்புமுடையர் பிறர்க்கு" என்று பிறவி ஞானியாகிய திருவள்ளுவர் சொன்னதினுண்மையிதுவே. நமது இருஷிகள் ஞான திர்ஷ்டியினால் இவ்வுண்மையையுணர்ந்து வெகு திட்பநுட்பானுபவத்தோடும் சூக்ஷமபுத்தியோடும் நமது ஜனசார சம்பிரதாயங்களை யேற்படுத்தி யிருக்கிறார்கள். இக்காலத்தவர் அவற்றின் உண்மையுணரமாட்டாமல் அவர்கள் உட்கருத்தைவிட்டு மேலாடம்பரங்களை மட்டும் பேருக்கு அனுசரித்து வருகிறார்கள். இதனால் பிரயோசனம் ஒன்றுமில்லை. கெடுதியுமுண்டு. ஆனால், இப்படி அப்பிரயோஜனமாயுள்ள ஜனசார சம்பிரதாயங்களைச் சீர்திருத்த வேண்டியதவசியமென்பதை எல்லாரும் ஒப்புக்கொண்டாலும், சீர்திருத்தும் வகையைப்பற்றி வித்தியாசப்படுகிறார்கள். ஹிந்துமத தர்ம சாஸ்திரத்தில் எல்லாவித நடத்தைகளுக்கும் ஆதாரமிருக்கிறது. அந்த சாஸ்திரங்களேற்பட்டதின் கருத்தே தன்னைத்தானடக்கச் சக்தியில்லாதவர்களுக்குத் தன்னடக்கமுண்டாக ஒரு உபாயமிருக்கவேண்டுமென்பதே. இதுவே எல்லா சாஸ்திரங்களின் நோக்கமும். அந்த உபாயம் அனாதிதொட்டு இல்லாவிட்டாலும், மனுஷன் ஞாபகத்துக் கெட்டாத காலம் முதல் அனுஷ்டானத்திலிருந்த காரணத்தினால் ஜனசம்மதம்பெற்று, எப்படிப்பட்ட அடங்காத் துஷ்டரும் அதற்கு அடங்கி நடக்கும்படி செய்யத்தக்க வன்மைபெற்றதாய் விட்டது. இப்பொழுது இவ்வனுஷ்டானங்களின் அதிகாரித்தை வேரோடுகளைந்துவிட்டால், சாதாரண ஜனங்கள் அடங்கிநடக்க ஒரு கட்டுக் காபந்துவேண்டுமே! அது இக்காலத்தவரால் ஏற்படுத்தமுடியாது. முடிந்தாலும் ஜனங்களால் ஏகோபித்து மதிக்கப்படமாட்டாது. ஆகையால் பூர்வீகமான மதக்கொள்கைகளுக்கும், சித்தாந்தங்களுக்கும் ஒரு கெடுதிவாராமல் வைதிகர்களுக்கு உண்மையான சாஸ்திர ஞானமுண்டாகச்செய்து அவர்களை அனுசாரணரியாக மேலுயர்த்தி இப்பொழுதுள்ள ஊழல்களை நீக்க வேண்டுமென்பது மற்றொரு சாரார் சித்தாந்தம். இப்படி இருவகையாரும் அவர்கள் நம்பியனுசரிக்கும் மூலக்கொள்கையில் வேறுபட்டு நிற்றலால், மத சித்தாந்திகள் தங்கள் முறைப்படி ஜனக்ஷேமத்துக்குழைக்கக் கருதி 1904-ளு ஜனவரிமீ 1-உயன்று "ஹிந்துமஹாசங்கம்" (Hindu Association) என்று ஒரு நூதன சங்கமேற்படுத்தி யூக்கமுடனுழைக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். இந்த சங்கம் விக்டோரியா ஹாலில் ஜஸ்டிஸ் ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயர் அவர்கள் அக்கிராசனாதிபதியாக வீற்றிருக்க, ப்ரொபெஸ்ஸர் ரெங்காசாரியார் அவர்கள் பிரதமஸ்தராக நின்றுபேச, மிஸ் ஸஸ் அனி பெஸன்ட் அவர்களால் கல்லுங் கரையும்படி உள்ள முருகச் செய்த ஒரு திவ்ய உபந்யாசத்தால் ஜாதககர்மம் செய்யப் பெற்றவதரித்தது. இதை ஆசாரச்சீர்த்திருத்தக்காரர் தங்கள் ஊக்கத்தினாற் பிறந்ததாகக் கொண்டாடுகிறார்கள். கொண்டாடுவதினால் குற்றமொன்றுமில்லை. அகம்பாவத்தை நீக்கி 'அவனன்றியோரணுவமசையாது' என்பதை நினைத்து மேன்மேலும் பொதுக்ஷேமத்துக் குழைக்க வழிதேடி தன்னடக்கத்தைக் கைவிடாது ஒழுகுதலே சத்துக்களுக்கு அடையாளம். "அகம்பாவத்தாலே அழிந்தான் துரியோதனன்" என்று நமது பெண்டுகள் சொல்லும் வார்த்தை பொய்யல்ல. அகங்கரித்தால் அழிவது நிச்சயம். இங்கே மிஸ்டர் ஜஸ்டிஸ் ரானடே யவர்கள் இதை யெழுதுபவருக்குச் சொல்லிய புத்திமதியொன்றையெடுத்துச் சொல்வது ஒக்கும். சென்னையில் சுதேசபாஷாக் கல்வியைப்பற்றி 1898-ம் வருஷத்தில் நடந்த அமளியில் இங்கிலீஷ் படித்தவர்கள் சுதேசபாஷையை அநாதரவு செய்வதைப்பற்றி உள்ளம் பொங்க உண்மையையுள்ளபடி ஒளிக்காது தானாக மேலெழுந்து கிளம்பிய சொல்வன்மையைச் சாந்தப்படுத்தாது அவர்கள் குறையைப் பற்றிக் கடிந்தெழுதிய பிரபந்த மொன்றை (Vernacular Studies in Madras) அவருக்கு அனுப்பிய பொழுது அவர் உடனே இது விஷயத்தில் 20-வருஷ

ஷகாலமாய் அவர் உழைத்து வந்ததின் அனுபவத்தைச்சொல்லி ஆதாரவுகூறி, இதை யெழுதுபவர் கைப்பற்றியுழைக்கும் முறை உத்தமமும் உண்மையுமானதென்றும் ஆனால் அது வழிபற்றி நடவாதவரைப்பற்றிக் கடுமையாகச் சொல்லி அவர்கள் குறைகளை யெடுத்துக்காட்டுவதால் உண்டாகும் சாதகம் ஒன்றுமில்லையென்றும், ஊக்கத்தைக் கைவிடாது உண்மையில்நம்பிக்கைவைத்து உழைத்துவருகையில், பிறரைப்பற்றி யெழுதுவதில் சாந்தமாகவேயிருந்து பேசுவது எப்போதும் எண்ணரிய நன்மைபயப்பதாயிருக்குமென்றும் இந்த உண்மையின் மர்மத்தை பொதுவிஷயத்துக் குழைக்குமெவரும் உள்ளாய்ந்துணர்ந்து உண்மையாக நம்பி யுழைக்கவேண்டுமென்றும், ஒரு ஆயுசுகாலமாக அவர் பொதுநன்மைக் குழைத்துவந்ததிலுணர்ந்த மேலான தத்துவ ரஹசியம் இதென்றும், இதை நாம் மனதில்வைத்து நடக்கவேண்டுமென்றும், தாய் பிள்ளைக்குச் சொல்லுவதுபோல் அன்புநிறைந்த ஆப்த வசனங்களால் சொல்லியுபதேசித்தார். அந்த உபதேசத்தை இன்னம் மறக்கக்கூடவில்லை. மனம் பதறி யேதாவது கடுமையாக வெழுதிவிட்டால், பிறகு அதை வாசிக்கும்பொழுது அவர் அன்பு நிறைந்த ஆர்வமொழிகள் உள்ளிருந்து கிளம்பி இனிய நாதகீதத்தோடு சப்தித்துக்காட்டுகின்றன. அப்பொழுது 'ஐயோ!' இந்த சந்தோபசாந்தம் எப்போது நமக்கு சித்திக்கும்! எவ்வளவு அடக்கினாலும் நாமறியாமல் இந்த ரௌத்ராகாரம் லக்ஷம் கோடி விதமாக உருமாறி வேஷம் மாறி வெளியே வந்து வில்லங்கம் விளைக்கின்றதே!" யென்று உள்ளத்தில் தோன்றி நம்மனதை ஆழ்ந்த சிந்தையிலமுக்கிவிட்டுப்போகும். அவர் வழிபற்றியுழைக்கிறதாகச் சொல்லும் எல்லாரும் இந்தப் பரமரகசியத்தை அவரிடமறிந்து அவருக்கிருந்தசாந்தோபசாந்தம் தங்களுக்குக் கைவல்யமாக சித்திக்கப்பாடுபட்டுழைக்கவேண்டும். "கஞ்சிவரதப்பா!' என்றதும் "எங்கு வரதப்பா?" என்றவன் கதையாக அவருடைய வார்த்தைகளைமட்டும் சொல்லி, நம்மனம் போனபடி யதற்கு அர்த்தம் செய்துகொண்டு 'நானுமவர் வழிபற்றித்தான் செல்கிறேன்' என்று பிருதுகூறிப் பேசுவதினால் எவரும் அவரைப்போல் ஆய்விடமாட்டார்கள். அவர் புத்திவன்மையில் அவ்வளவு மேம்பட்டு விளங்கினாலும் அவருடைய புத்தியெப்போதும் பத்திக்கு அடங்கியேயிருந்தது என்பதையுணரவேண்டும். அவர் பக்தர்கள் செயலைக்குறித்துப் பிரஸ்தாபிக்கையில் தன்னைமறந்து தன்னறிவழிந்து அவர் மனது அந்தப்பக்தர்களோடு லயப்பட்டு நிற்க அவரைக்காண்பதும் கேட்பதும் ஆச்சரியமாயிருக்குமென்று அவருடை சிஷர்களில் ஒருவர் அவரைப்பற்றிய விர்த்தாந்தங்கள் பலவற்றில் இதையொன்றாகச்சொல்லி யுள்ளார். இதன் உள்ளனுபவத்தை யுணர்ந்தோரே இவரை யறிந்தவராவார். பக்திக் கடங்கினபுத்தியே எப்போதும் சோபிக்கும்; நல்வழியும் காட்டும். பக்திக்கு மிஞ்சியபுத்தி புருஷனுக்கடங்காப் பெண்டீரைப்போல் மணமிழந்து கனமழிந்து மங்கலமு மிழந்துநிற்கும். இங்கேபுருஷன் என்றது மூடப்புருஷனையல்ல. பரமபுருஷனுக்கொப்பான சத்புருஷனைக்குறித்துச் சொன்னதாகக்கொள்ளவேண்டியது. மேற்றிசையாரும் புத்தியிலும் பக்தியே பெரிது என்னு முண்மையை யுணர்ந்துகொள்ளத் துவக்கியிருக்கிறார். "பக்தியில்லாத ஜன்மம் பாழ்" என்று கௌன்ட் லியோ டால்ஸ்டாய் சொன்னது சத்தியமென்று ப்ரொபெஸ்ஸர் ஜேம்ஸ் அவருடைய (Gifford Leetures) பிரசங்கத்தில் மெய்ப்பித்து வற்புறுத்திக்காட்டியதாகச்சென்ற சஞ்சிகையில் அவருடைய புஸ்தகத்தைப்பார்வையிட்டெழுதிய "சிவனருள்பலபலசிவனுமாகும்" என்னும் தலைப்பின்கீழ்க்கண்ட விஷயத்தில் கூறியிருப்பதைக்கொண்டு தெரிந்து கொள்ளலாம். பரிணாமவாதிகள் (Evolutionists) பக்ஷம் பலக்க பலக்க இத்தேசத்துப் பூர்வீக ஆர்யமதவுண்மைகள் மேற்றிசையில் ஒன்றொன்றாகப் பிரபலப்பட்டுவருமென்று நினைக்க எது வுண்டாயிருக்கிறது. அதைப்பற்றி விஸ்தரிக்கில் வளருமென்று இத்தோடு நிறுத்தலானோம். இவ்வகையில் மிஸ்ஸஸ் பெஸன்ட் ஹிந்துக்களுக்குத் தம்மதத்திற்பற்றுண்டாகும்படி அவருடைய பிரசங்கங்களால் பேருதவி செய்துழைத்துவருகிறார். இம்முறை அடையாற்றில் அவர் செய்த நான்கு பிரசங்கங்களும் இவ்வகையில் பெரும்பயன் விளைப்பனவாம். கீழ்த்திசை ஞானமும் மேற்றிசை யூக்கமும் சாமர்த்தியமும் சேர்ந்து விளங்குவதே இக்காலத்துக்கேற்ற ஞானலெக்ஷணமாம். இதை யெல்லாரும்கவனித்து மனதிலிருத்தவேண்டும்.

---

சிறுவர்க்கானபக்கம்.

## ஆத்திரக்காரனுக்கு புத்திமட்டு.

ஒரு காலத்தில் லுவெலின் என்னும் வேடனொருவனிருந்தான். அவன் அனேக வேடர்களுக்குத் தலைவனாயிருந்தான். அவனிடத்தில் மிகுந்த விசுவாசமுள்ள கெல்லர்ட் என்னும் ஒரு நாயிருந்தது. அவன் வேட்டைக்குப் புறப்படும்பொழுது வேடர்களும் நாய்களும் வந்துசேரும்பொருட்டு கொம்பூதுவது வழக்கம். ஒருநாட் காலையில் வழக்கப்படி கொம்பு ஊதினான். எல்லாரும் வந்து சேர்ந்தார்கள். கெல்லெர்ட் என்னும் நாய் மட்டும் வரவில்லை. அது வராத காரணத்தை ஆராயாமலே வேட்டைக்குப் போய்விட்டான். அவனுக்கு இரண்டு மூன்று வயதில் ஒரு பெண் குழந்தையுண்டு. அக்குழந்தை வீட்டில் கட்டிலின்மேல் படுத்து தூங்கிக்கொண்டிருந்தது. வேட்டைக்குப்போன லுவெலினுக்கு தன்னுடைய சாமர்த்தியமான கெல்லெர்ட் வாராததினால் விசேஷமாக ஒன்றும் கிடைக்கவில்லை. வீட்டுக்குத் திரும்பிவந்தான். வீட்டு வாயலில் தேக முழுவதும் இரத்தம் வடிய லுவெலினது வருகையை கெல்லர்ட் எதிர்பார்த்து நின்றுகொண்டிருந்தது. லுவெலின் பார்த்தான். திடுக்கிட்டு நின்றான். இந்த நாய் ஏதோ விபரீதம் செய்துவிட்டது என்று நினைத்து தன் பெண் தூங்குகிற அறையில் போய்ப்பார்த்தான். பெண்ணைக் காணோம். பெண்ணின் பெயரைச்சொல்லிக் கூப்பிட்டுப்பார்த்தான். அதற்கும் பதிலில்லை. உள்ளெல்லாம் இரத்தமாயிருந்தது. கெல்லெர்ட் தான் தன் பெண்ணைக் கொன்று தின்றுவிட்டதென்று தீர்மானித்து, 'பாழும் நாயே! என் குழந்தையைத் தின்றபிறகு நீ யிருக்கவேண்டுமோ!' என்று சொல்லித் தன் கையிலிருந்த கத்தியை அதன் கழுத்துக்கு நேராக வீசினான். பரிதாபமுள்ள அவ்வற்ப பிராணியானது பெருங் கூச்சலிட்டுக்கொண்டு தன் பிராணனை இழந்தது. கெல்லெர்ட் போட்ட கூச்சலால் படுக்கையின் ஒரு மூலையில் சுருட்டிக்கொண்டிருந்த பெண் எழுந்து அழவாரம்பித்தது. லுவெலின் ஐயோ! நம் பெண் உயிரோடிருக்கிறதே கீழே இரத்தமிருக்கக் காரணமென்ன என்று நாற்புறமும் நன்றாய்ப் பார்த்தான். கட்டிலுக் கடியில் ஒரு பெரிய ஓநாயைக் கடித்து சிதைத்துக் கொன்றுபோட்டிருந்தது. 'ஆ! எனக்கு உதவிசெய்த உபகாரியைக் கொன்றேனே!! என் குழந்தையைக் கொன்று தின்கவந்த கொடிய ஜந்துவை வதைத்து குழந்தையின் உயிரை ரக்ஷித்த நன்றியறிவுள்ள பிராணியைக் கொன்றுவிட்டேனே.' என்று விசனித்தான். ஆத்திரக்காரனுக்கு புத்திமட்டு. 'ஆராய்ந்தறியாமல் நியாயம் வெளிப்படாது.' என்னும் பழமொழி இக்கதைக்கு மிகவும் பொருந்தியிருக்கிறது. இதைப் படிக்கும் சிறுவர்களே உங்களுக்கு ஆத்திரம்வரும் தருணத்தில் இக்கதையை நினைத்துக்கொள்ளுங்கள்.

---

RESOURCEFUL MEN.

## உபாயஸ்தர்கள்.

ஓரூரில் ஒருகோமுட்டி இருந்தான். ஒருநாள் இராத்திரி ஒரு திருடன் அவன் வீட்டுப்பாணையின்மேல் ஒளித்துக் கொண்டிருந்தான், அவ்வீட்டில் செட்டி படுத்துக்கொள்ளப்போனான் அப்போது அங்கு திருடன் இருக்கிற அரவம் கண்டு செட்டி ஓர் உபாயம் செய்தான். அதாவது தன்பெட்டிகள் எல்லாம் பூட்டியிருக்கின்றனவாவென்று பார்ப்பதுபோல் தொட்டு தொட்டு பார்த்தான் உடனே உண்மையாய்

தேள் கொட்டினவனைப்போல் ஐயையோ கையில் தேள் கொட்டி விட்டதே என்று உரக்கக்கூவி அழுதான். அவன் அழுகிறகுரலைக் கேட்டு அயல் விட்டுக்காரரெல்லாம் ஓடிவந்து பார்த்து மந்திரித்து விஷமிரங்கிற்றா வென்றார்கள். அதற்கு செட்டி விஷமிறங்கிற்று அந்த புண்ணியவான் மாத்திரம் இன்னும் பரணையை விட்டு இறங்கவில்லையே யென்று பரணையிலிருக்கிறவனை அவர்களுக்குக் காட்டினான். உடனே அவர்கள் திருடனைப் பிடித்துக்கொண்டு கோமுட்டியின் உபாயத்தை மெச்சினார்கள். அடுத்த வீட்டில் அவனுடைய தம்பி ஒருவன் இருந்தான். அவனுக்கு ஆப்தனான சிநேகிதனொருவன் ஒருநாள் இராத்திரி தன் வீட்டிற்கு வந்தபோது செட்டி தன் காசுப்பையை கொட்டி எண்ணிக்கொண்டிருக்கையில் விளக்கு நின்றுவிட்டது. உடனே சிநேகிதன் பணத்தை எடுத்துக்கொள்ளப் போகிறானென்று கோமுட்டி சந்தேகித்து ஓர் உபாயம் செய்தான். அதாவது தன் சிநேகிதன் கைகளிரண்டையும் கெட்டியாகப்' பிடித்துக்கொண்டு நான் ஒருவாக்குகேட்கிறேன், அதென்னவென்றால்: இதுவரையில் நீ என்னிடத்தில் அதிக விசுவாசமுடைய வனாகவிருந்தது போல் உன் ஆயுசுவரையில் இருக்கிறதாக இதோ தீபம்வருகிறது அத்தீப மறியக் கைபோட்டுக் கொடென்று தன் பெண்சாதியை சீக்கிரம் தீபம் கொண்டுவரச்சொல்லி தீபம்வருகிறவரையில் கைகளைவிடாமல் கெட்டியாய்ப் பிடித்திருந்து தீபம் வந்தவுடனே அதறியக் கைபோட்டுக் கொடென்று கைகளைவிட்டுவிட்டான்.

எம். பி. எம். ராமலிங்கம்.

# "ANANDA MISSION"

## For the Propogation of Truth and Knowledge.

**As the Way to Health, Happiness and Life, Through Self-Help, Self-Control and Self-Culture.**

***"EKAM SATYAM BRAHMA."—SRUTIVAK.***

"Seek Truth wherever you can find it,"
"But Make your Choice and Stick to it"
till you reach the end.

"*Truth is hard Finding!*" **Yes,** "*Uncompromising too* **when** *whole*; **Yet Try!** "*Awake, Arise and Stop not till you reach the Goal.*"—*Sruti.*

"And Ye shall Know the Truth and the Truth shall make you Free"—Christ.

All persons who love Truth for its own sake and are willing to show good-will towards All, regardless of race, creed, religion, caste or color, will be eligible to become members, helpers or sympathisers of the Mission as it may suit their intelligence, development and selfless state.

Sincerity in thought, word and deed, an essential and unfailing condition to be scrupulously fulfilled by all.

***Satyameva Jaati.***

**Hail! Ananda Natesa!**

*Sri Akhandananda Satgururve Namaha.*

The MADRAS MAIL of 20th Oct. says:—

THE "VIVEKA CHINTAMANI."

"This high-class Tamil periodical entered upon the twelfth year of its existence a few months ago, and it has done much good work during this period to deserve the support of the Indian community. Mr. C. V. Swaminatha Iyer, its editor, has through his unaided exertions, brought the magazine to a high degree of literary merit. During the last year he has made religious philosophy a special feature of the journal and has contributed to its pages devotional writings particularly interesting to Hindu ladies. He is about to issue a collection of philosophic poems in easy Tamil, popularising the teachings of the Advaita school."

The *Hindu* (Nov. 5.) remarks: "The Journal aims at supplying the crying need in the present one sided secular education by emphasizing the spiritual side of man's growth and stimulating enquiry and thought in that line on principles which are of universal application."

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy $7\frac{1}{2}$ As.: Back Nos. 8 As. each.

**English & Foreign Subscription 7s. 6d. net per annum.**

**Thin Paper Edition** for the People:—

**Subscrn. Price: Yearly Rs. 4; Half-yearly Rs. 2-2.**

**Single copy, current No. $5\frac{1}{2}$ As.; Back Nos. 6 As. Each.**

**English & Foreign Subscription 5s 6d. net per annum.**

**If strictly Prepaid** at the commencement of the term, (*i.e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As, off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and avoid vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்'.

**தளமான காகிதப்பதிப்பு:**— அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி $7\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசான காகிதப்பதிப்பு:–சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.

தனிப்பிரதி $5\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

எப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றப்படி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜ்ஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்கு வரவுக்கு மிடமிராது.